வமையின்பெயர்--குறை,இலம்பாடு,மிச்சை,குறுவாழ்க்கை,மிடி,
ரப்பு,சிறுமை,ஒற்கம்,இன்மை,நல்குரவு,அல்கல்,தரித்திரம்.கஉ.
கயின்பெயர்—மறல்,இகல்,முனை,முரண்,தா, மடி, தெவ்,அரி. அ.

ாபத்தின்பெயர்—வெறுத்தல், சினம், குரோதம், வெகுளி, அரி
ப்பு, சீற்றம், கலாம், கதம், செயிர். கூ.
ாபக்குறிப்பின்பெயர்—கறுப்பு, சிவப்பு, கன்றல், புழுங்கல்,
புகைதல், கொதித்தல். சு.

ன்கோபத்தின்பெயர்-வெம்பல்,கொந்தல்,கனிதல்,கோம்பல். ச.
ருங்கோபத்தின்பெயர்—விடைத்தல், முனைதல், சீறல், உருத்
தல், உலறல், காய்தல், உடற்றல், தீவிரம். அ.
வைரத்தின்பெயர்—செற்றம், சலம், பவம், தொந்தம்,வேரம்.ரு.

ருத்தத்தின்பெயர்—உயவு, அனுக்கம், கவற்சி, உயங்குதல், சசிவு,
அணங்கு, அயர்வு, நொசிவு, நோ, ஆய்வு, மிறை, சமழ்த்தல்,
வயாவு, ஆகுலம், அழுங்கல். கரு.
மன்மையின்பெயர்—ஏற்றம், ஞெள்ளல், சாலூரம், மேதை. ச.

வறுபாட்டின்பெயர்—வீற்று, விகிர்தம், பின்னம், விபரீதம்,விரூ
பம், விள்ளல், வேற்றுமை, திரிபு, பேதம், விகடம். கய.
னிமையின்பெயர்—ஏகம், புலம்பு, கேவலம். ங.

யக்கத்தின்பெயர்—இருள், உணராமை, மத்தம், இளமை, மாழா
த்தல், பித்தம், வெருள், களி, கழுமல், மோகம், உன்மத்தம்,
மாழ்கல், அனர்தர், ஏமம், களன், பேது, மையல், மைந்து,
மருள், மறல், மான்றல், மயர்வு. உஉ.

தின்பெயர்—தீங்கு,கோள்,அந்தராயம்,விக்கினம், முட்டுப்பாடு,
அலாபம், தட்டு, ஊறு, அந்தரம். கூ.
சாம்பின்பெயர்—அலசல், அஞ்சி, அழுங்கல், மடி, ஞொள்கல்,
தூங்கல், அசைவு, மந்தம், சோகம், ஆலசியம். கய.

ஞ்சத்தின்பெயர்—குடிலம், புள்ளுவம், கூடம்,குத்திரம், மாயை,
குய்யம், படிறு, சாட்டியம், பட்டிமை. கூ.
துணமின்மையின்பெயர்—செடி, சீத்தை, சிதம்பு, சிரணம். ச.
காமதத்தின்பெயர்—விளம்பனம், விளம்பம். உ.

* வைரம்-நெடுங்காலமாக நிகழுங்கோபம்.

இழிவொடுதிரிதனந்தலிறுதலேமுறிதல்கந்தல்
வழுகயஞ்சிதைவழுங்கன்மடிசுதங்கேடாநிந்தை
இழிவெள்ளனகலொல்லாமையிகழ்ச்சியாமுவர்ப்புமப்பேர்
குழைவுருவருவருப்புக்குற்சிதம்பயிர்ப்புமாமே. (௬௯

மறமகங்கலுடம்பங்கம்வருஞ்செடிதுரிதம்பாவம்
வறிதுகொன்வீண்விருதாமன்னியபயனிலாமை
அறைதருசந்தேகப்பேரயிர்ப்பையங்கடுத்தல்சங்கை
கறையிலோர்தலைக்காமப்பேர்கைக்கிளையாகுமென்ப. (௭௦

சிறந்திடுஞ்சன்மந்தோற்றஞ்செனனமேபவஞ்சனிப்புப்
பிறந்தையுற்பவமென்றேழும்பிறப்பாமுற்பத்தியும்பேர்
அறைந்தசூதகமாசௌசம்புனிறேயீன்றணிமையின்பேர்
துறந்தவாலாமைபூப்புத்தோகைமார்தொடாப்பொருட்டே. (௭௧

அன்னோவோடந்தோவாவோவத்தோவோடச்சோவையோ
என்னேயெற்றெவனெனுஞ்சொலதிசயமுறவிரங்கல்
மன்னுமௌவியமேயென்பமனக்கோட்டமழுக்காற்றின்பேர்
சொன்னநோனாமைகூரஞ்சூழ்ந்திடும்பொறாமைமுப்பேர். (௭௨

அல்லலேயலக்கண்மம்மரந்தைகோட்டாலைபீழை
செல்லல்கேதங்கலக்கஞ்சிறுமைகுருறுகண்புன்கண்
சொல்லுமிட்டளமின்னாவேதுனிபருவரலேதுக்கம்
ஒல்லுநோவழுங்கல்பீடையுலமரலல்லகண்டம். (௭௩)

கவ்வையாதனைபழங்கண்கையாறுந்தொல்லைபையுள்
எவ்வமேதம்வெறுப்பேயிடும்பையேயிடுக்கணின்னல்
வவ்வியபடர்பனித்தல்வருமைவெய்துறலேலைபதல்
வெவ்வியகவலைதீயவிழுமமாறேழுந்துன்பம். (௭௪)

மாதர்நச்சிச்சையேடைவயாநம்புநசைநயப்புக்
காதல்வெப்பம்விருப்பங்காமமேயிராகம்பற்றே
ஆதரம்பெட்புவேட்கையார்வமேமேவல்வெஃகல்
ஓதியவிழைவுமூவேழுறுபெயராசையாமே. (௭௫)

சூழ்தருமோகநம்பல்சொற்றிடுமிரதிவெஃகல்
தாழ்தலேகவர்தல்பெட்டல்சார்புடனிவறல்வேண்டல்
வீழ்தல்வேணவாவீராறும்வேட்கையின்பெருக்கமென்ப
மாழ்கியவிரகங்காமமதனமேகாமநோயாம். (௭௬)

;ட்டின்பெயர்—இழிவு, திரிதல், நந்தல், இறுதல், முறிதல், கந்தல், வழு, கயம், சிதைவு, அழுங்கல், மடி, சுதம். கஉ.
கழ்ச்சியின்பெயர்—நிந்தை, இழிவு, எள்ளல், நகல், ஒல்லாமை, உவர்ப்பு. சு. அருவருப்பின்பெயர்—குற்சிதம், பயிர்ப்பு. உ.

ாவத்தின்பெயர்—மறம், அகம், கலுடம்,பங்கம்,செடி,துரிதம்.சு.
பலிலாமையின்பெயர்—வறிது, கொன், வீண், விருதா. ச.
ந்தேகத்தின்பெயர்—அயிர்ப்பு, ஐயம், கடுத்தல், சங்கை. ச.
நதலைக்காமத்தின்பெயர்—கைக்கிளை. க.

றப்பின்பெயர்—சன்மம், தோற்றம், செனனம், பவம், சனிப்பு, பிறந்தை, உற்பவம், உற்பத்தி. அ.
தகத்தின்பெயர்-ஆசௌசம்.க. ஈன்றணிமையின்பெயர்-புனிறு.க
தாகைமார்தொடாப்பொருட்டின்பெயர்—வாலாமை, பூப்பு. உ.

திசயமுறவிரங்கலின்பெயர்—அன்னோ, அந்தோ, ஆ,ஓ,அத்தோ, அச்சோ, ஐயோ, என்னே, எற்று, எவன். க0.
ணக்கோட்டத்தின்பெயர்—ஔவியம். க.
ழுக்காற்றின்பெயர்—நோனுமை, கூரம், பொறுமை. ௩.

ன்பத்தின்பெயர்—அல்லல், அலக்கண், மம்மர், அரந்தை, கோட்டாலை, பீழை, செல்லல், கேதம், கலக்கம், சிறுமை, சூர், உறுகண், புன்கண், இட்டளம், இன்னா, துனி, பருவரல், துக்கம், நோ, அழுங்கல், பீடை, உலமரல், அல்லகண்டம். உ௩.

கவ்வை, யாதனை, பழங்கண், கையாறு, நடலை, பையுள், வ்வம், ஏதம், வெறுப்பு, இடும்பை, இடுக்கண், இன்னல், படர், னித்தல், வறுமை, வெய்துறல், பைதல், கவலை, விழுமம். கஙு. (ஆ சஉ.)

ஆசையின்பெயர்—மாதர், நச்சு, இச்சை, ஏடை, வயா, நம்பு, நசை, நயப்பு, காதல், வெப்பம், விருப்பம், காமம், இராகம், பற்று, ஆதரம், பெட்பு, வேட்கை, ஆர்வம், மேவல், வெஃகல், விழைவு. உக.

வேட்கைப்பெருக்கத்தின்பெயர்—மோகம், நம்பல், இரதி, வெஃகல், தாழ்தல், கவர்தல், பெட்டல், சார்ப்பு, இவறல், வேண்டல், வீழ்தல், வேணவா. கஉ.
காமநோயின்பெயர்—விரகம், காமம், மதனம். ௩.

மாரியாமயமேபுன்கண்மடிநிழன்மடங்கல்பையுள்
சூர்பிணியுரோகங்குந்தஞ்சூழணங்கிராறுந்நோய்
பாரியவாதைபீதிவேதனைபண்ணுநோயாம்
ஓரும்யாதனைகொல்லாநோன்புருறுநரகநோயே. (எ

அன்னவேயனையசேத்தேயாங்கொப்பப்புரையப்போல
என்னவேபொருவவெள்ளவிகலவேகடுப்பமானச்
சொன்னகேள்தகவுதூக்குத்துணையிணைநிகரநேர
மன்னும்வீழ்வுறழவற்றேமலைவெண்மூன்றுவமைப்பேரே. (எஅ

மாலைநீர்தகவுபெற்றிமரபொடுகிழமைவண்மை
சால்பொடுதகுதியான்மைதகைமையேயியல்புதன்மை
பால்விதிகொள்கைபண்புபடிமுறைபரிசிவ்வெல்லாம்
கோலமார்குணநாலைந்தாங்குணநிறமிரண்டும்பண்பாம். (எகூ

கையொழியாமைகைதூவாமையாங்கையொழுக்கம்
கையறல்செயலறற்பேர்கையடையடைக்கலப்பேர்
மையிலாவுரிமையின்பேர்வருசெழுதகைமையோடு
பொய்யிலாக்கிழமைமற்றையுரித்தெனப்புகலலாமே. (அ0

தொடியொருபலமாங்கஃசுசொற்றகாற்பலமாந்தூக்கு
நெடியகாத்துலாங்களென்பநிறைநூறுபலமேயாகும்
படியிலொன்றேகமென்பபத்தென்பதசமாநூறு
நொடிதரிற்சதமென்றுகுமாயிரநூற்றுப்பத்தே. (அக

தேங்கியபுகழான்குன்றைக்குணபத்திரன்திருத்தாள்போற்றி
வீங்குநீர்ப்பழனஞ்சூழ்ந்தவீரைமண்டலவன்செய்தான்
பாங்கினல்விளங்குபண்புபற்றியபெயரினீட்டம்
ஓங்கியகவிதையெண்ணிலொன்பதிற்றொன்பதொன்றே. (அஉ)

பண்புபற்றியபெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் - சுகசு.

—oo✻oo—

ாயின்பெயர்—மாரி, ஆமயம், புன்கண், மடி, நிழல், மடங்கல்,
பையுள், சூர், பிணி, உரோகம், குந்தம், அணங்கு. கஉ.
பதனைபண்ணுநோயின்பெயர்—வாதை, பீதி. உ.
கநோயின்பெயர்—யாதனை. க.

வமையின்பெயர்—அன்ன, அனைய, சேத்து, ஆங்கு, ஒப்ப,
புரைய, போல, என்ன, பொருவ, எள்ள, இகல, கடுப்ப, மான,
கேழ், தகவு, தூக்கு, துணை, இணை, நிகர, நேர, வீழ்வு, உறழ,
அற்று, மலைவு. உச.

ணத்தின்பெயர்—மாலை, நீர், தகவு, பெற்றி, மரபு, கிழமை, வண்
மை, சால்பு, தகுதி, பான்மை, தகைமை, இயல்பு, தன்மை,
பால், விதி, கொள்கை, பண்பு, படி, முறை, பரிசு. உ௦.
ண்பின்பெயர்—குணம், நிறம். உ.

கயொழியாமையின்பெயர்—கைதூவாமை. க.
ழுக்கத்தின்பெயர்—கை. க. செயலறலின்பெயர்—கையறல். க.
டைக்கலத்தின்பெயர்—கையடை. க.
ரிமையின்பெயர்—கெழுதகைமை, கிழமை, உரித்து. ங.

ருபலத்தின்பெயர்—தொடி. க. காற்பலத்தின்பெயர்—கஃசு. க.
ராக்கின்பெயர்—கா, துலாம். உ.
ாறுபலத்தின்பெயர்—நிறை. க. ஒன்றன்பெயர்—ஏகம். க.
த்தின்பெயர்—தசம். க. நூற்றின்பெயர்—சதம். க.
யிரத்தின்பெயர்—நூற்றுப்பத்து. க.



ஒன்பதாவது

# செயல்பற்றியபெயர்த்தொகுதி.

## காப்பு.

வியன்மிக்கவைரத்தால்வேர்வீழ்த்துப்பொற்கவடுகொண்டு
மயமிக்கமரகதத்தால்வண்டழைபொதுளிப்பூந்தொத்
தியலுற்றபதுமராகமெதிர்பிண்டியிறைதாள்போற்றிச்
செயல்பற்றும்பெயர்க்கூட்டத்தைச்செப்புவமிப்பாற்கேண்மின். (

செயல்விதிகருமங்கன்மஞ்செய்தொழில்வினையுமப்பேர்
அயர்தலேவனைதலாற்றல்குயிறலோடிழைத்தல்செய்தல்
நியமித்தல்விதித்தன்மற்றுநிருமித்தலொடுசிட்டித்தல்
பயனுறப்படைத்தலோடுபாரித்தல்பிறப்பித்தற்பேர். (உ

தொடலையுண்டாட்டுப்பொய்தல்சூழ்விலாசனையேவண்டல்
கெடவரல்பண்ணையுப்புக்கிரீடையேகேளியோரை
புடைமுலையாராடற்பேர்பொழுதுபோக்கேவினோதம்
படிபாராட்டுதல்குலாவல்பரிந்துகொண்டாடன்மெச்சல். (ங

வதுவைகைப்பற்றலேதீவலஞ்செய்தன்மணங்கல்யாணம்
விதியுளிவேட்டன்மன்றல்விவாகமெண்பேர்விளங்கும்
புதுவிழாமுருகுசாறுபுத்தேளுற்சவமாஞ்சேறு
துதைமலர்கொண்டுபோற்றுந்துணங்கறலிரண்டுமப்பேர். (ச)

புனைதல்கைசெய்தல்வேய்தல்பொற்புடனலங்கரித்தல்
வனைதலேயணிதல்பூசன்மண்ணலொப்பனையொன்பானும்
வனமலர்மிலைதல்வேய்தன்மலைதல்சூடுதலிம்முப்பேர்
சினைமலரடைச்சலோடுசெருகுதல்சொருகுதற்பேர். (ரு)

அருந்திடறுய்த்தன்மாந்தலயிறலேயமுதுசெய்தல்
பொருந்தவேதாங்கைதொட்டல்புசித்தல்போசனமேயார்தல்
பரிந்தனர்நுகர்தறின்றல்பாரணமிசைதறுற்றல்
இருந்துணற்பேர்விழுங்கலிசைதருநொண்டனுங்கல். (சு)

# பெயர்ப் பிரிவு.

இ - ள். வியன் மிக்க வைரத்தால் வேர் வீழ்த்து - அதிசயம்
ந்த வச்சிரத்தினுல் வேரோட்டி,—பொற்சுவடு கொண்டு -
ான்னுலாகிய கொம்புகளைப் பொருந்தி,—மயம் மிக்க மரகதத்
ல் வண் தழை பொதுளி - அழகு மிகுந்த மரகதத்தினுல் அழகிய
லகள் தழைக்கப்பெற்று,—இயல் உற்ற பதுமராகப் பூந்தொ
ı எதிர் பிண்டி இறை தாள் போற்றி - குணம் பொருந்திய பது
ாகத்தாலாகிய மலர்த்திரள்கள் தோன்றப்பெறுகின்ற அசோக
த்தினிழலின்கண் வீற்றிருந்த கடவுளுடைய பாதங்களைத்துதி
,—இப்பால் செயல் பற்றும் பெயர்க்கூட்டத்தைச் செப்புவம் -
ிச் செயல்பற்றிய பெயர்த்தொகுதியை (யாம்) கூறுவோம்,—
ண்மின் - கேளுங்கள். எ - று.

ய்தொழிலின்பெயர்—செயல், விதி, கருமம், கன்மம், வினை. ரு.
ய்தலின்பெயர்—அயர்தல், வனைதல், ஆற்றல், குயிறல்,
இழைத்தல். ரு.
ப்பித்தலின்பெயர்—நியமித்தல், விதித்தல், நிருமித்தல், சிட்டி
த்தல், படைத்தல், பாரித்தல். சு.

ளிர்விளையாட்டின்பெயர்—தொடலை, உண்டாட்டு, பொய்தல்,
விலாசனை, வண்டல், கெடவரல், பண்ணை, உப்பு, கிரீடை,
கேளி, ஓரை. கக.
ாழுதுபோக்கலின்பெயர்—விநோதம். க.
ச்சலின்பெயர்—பாராட்டுதல், குலாவல், கொண்டாடல். ங.

வாகத்தின்பெயர்—வதுவை, கைப்பற்றல், தீவலஞ்செய்தல்,
மணம், கல்யாணம், விதியுளி, வேட்டல், மன்றல். அ.
சவத்தின்பெயர்—விழா, முருகு, சாறு, சேறு, துணங்கறல். ரு.

பனையின்பெயர்—புனைதல், கைசெய்தல், வேய்தல், பொற்பு,
அலங்கரித்தல், வனைதல், அணிதல், பூசல், மண்ணல். கூ.
ிதலின்பெயர்—மிலைதல், வேய்தல், மலைதல். ங.
ாருகுதலின்பெயர்—அடைச்சல், செருகுதல். உ.

ண்ணலின்பெயர்—அருந்திடல், துய்த்தல், மாந்தல், அயிறல்,
அமுதுசெய்தல், கைதொட்டல், புசித்தல், போசனம், ஆர்தல்,
நுகர்தல், தின்றல், பாரணம், மிசைதல், துற்றல். கச.
ழுங்கலின்பெயர்—நொண்டல், நுங்கல். உ.

துயிலல்கண்வளர்தல்பள்ளிதுயிறலேயுறங்கறுஞ்சல்
பயிலுங்கண்படையனந்தர்படைகனவோடுபத்தும்
இயலுநித்திரையாந்தூங்கலென்பதுநிரம்பாத்தூக்கம்
அயலவரெடுத்தலெற்றலாங்கவையெழுப்பலாமே. (

விரவியவழுதலின்பேர்விம்மலேகலுழ்கலக்கம்
பொருமுதல்கசிவேயேங்கலுரோதனமிரங்கலெட்டாம்
தெரிசனம்பார்வைநோக்கஞ்சிறப்பிற்கண்ணுறல்காண்டற்பேர்
அருமையிற்சிறக்கணித்தலடாங்கமேகடைக்கணித்தல். (

புரவுதானம்பகுத்தல்பொழிதலேயுதவனீட்டல்
விரவுபகாரம்வேள்விவிதரணங்கவிகைவண்மை
அருளல்வேளாண்மையீகையளித்தலேயுதாரம்வீசல்
தருதலினொடுதியாகங்கொடைகடப்பாடுஞ்சாற்றும். (

படைமயக்குற்றபோதும்படைமடமொன்றிலாதான்
மடைசெறிகடகத்தோளான்மதிக்குடைமன்னர்மன்னன்
கெடிமன்னர்வணங்குந்தாளான்கிருட்டிணராயன்கைபோற்
கொடைமடமென்றுசொல்பவரையாதுகொடுத்தலாமே. (க

போற்றியபயிக்கம்பாகம்பொருந்தியபலியேபிண்டம்
சாற்றியபிடிதமையஞ்சரிதையேம்பிச்சையின்பேர்
ஏற்றலேகுறைகோள்பின்சென்றிரத்தலேவேண்டலும்பேர்
மாற்றலேகரத்தலாகுமறுத்தலுநிறுத்தலும்பேர். (க

தெரித்தலேவரைதலோடுதீட்டுதல்பொறித்தல்கீறல்
வரித்தலேயெழுதுதற்பேர்வரிபொறிகணக்கிரேகை
விரித்தவக்கரமெழுத்தாம்விரகொடுசிதைத்தறேய்த்தல்
அரக்குதல்கிழ்தலும்பேரடைவேதுாய்தாக்கல்சீத்தல். (க

அர்ச்சனைவழிபாடேயாராதனைமூன்றும்பூசை
எச்சமேகிரதுவேள்வியிட்டியேயசனமோமம்
மெச்சியமகமேயூபம்விதியுளியாகமாகும்
நிச்சயமீதூரற்பேரிடங்கழிநெருங்கலும்பேர். (க

வியர்த்தலேசுவேதம்வேர்வாங்கசிவுமாமயாவுயிர்த்தல் *
மயக்கறவருத்தந்தீர்தல்வடுப்படல்கதுவாயாமே
உயிர்த்தலேவிடுதலென்பவொருங்கென்பவடங்கலுனே
கயக்குச்சோர்வாம்பிறக்குக்காட்டியவழுவின்பேரே. (க

* அயர்வுயிர்த்தல் என்றும் கூறுவர்.

திரையின்பெயர்—துயிலல், கண்வளர்தல், பள்ளி, துயிறல்,உற
ங்கல், துஞ்சல், கண்படை, * அனந்தர், படை, கனவு. க0.
ம்பாத்தூக்கத்தின்பெயர்—தூங்கல். க.
ழப்பலின்பெயர்—எடுத்தல், எற்றல். உ.

ழதலின்பெயர்—விம்மல், கலுழ், கலக்கம், பொருமுதல், கசிவு,
ஏங்கல், உரோதனம், இரங்கல். அ.
ண்டலின்பெயர்—தெரிசனம்,பார்வை,நோக்கம்,கண்ணுறல்.ச.
டைக்கணித்தலின்பெயர்—சிறக்கணித்தல், அபாங்கம். உ.

ாடையின்பெயர்—புரவு, தானம், பகுத்தல், பொழிதல், உத
வல், நீட்டல், உபகாரம், வேள்வி, விதரணம்,கவிகை, வண்மை,
அருளல், வேளாண்மை, ஈகை, அளித்தல், உதாரல், வீசல், தரு
தல், தியாகம், கடப்பாடு. உ0.

ரையாதுகொடுத்தலின்பெயர்—கொடைமடம். க.

ர்சையின்பெயர்—பயிக்கம், பாகம், பலி, பிண்டம், பிடிதம்,
ஐயம், சரிதை. எ.
ரத்தலின்பெயர்—ஏற்றல், குறைகோள், வேண்டல். ௩.
த்தலின்பெயர்—மாற்றல், மறுத்தல், நிறுத்தல். ௩.

ழுதலின்பெயர்—தெரித்தல், வரைதல், தீட்டுதல், பொறித்தல்,
கீறல், வரித்தல். சு. எழுத்தின்பெயர்—வரி, பொறி, கணக்கு,
இரேகை, அக்கரம். ரு. அரக்குதலின்பெயர்—சிதைத்தல்,
தேய்த்தல், கீழ்தல். ௩. தூய்தாக்கலின்பெயர்—சீத்தல். க.

சையின்பெயர்—அர்ச்சனை, வழிபாடு, ஆராதனை. ௩.
ாகத்தின்பெயர்—எச்சம், கிரது, வேள்வி, இட்டி, யசனம், ஓமம்,
மகம், யூபம், விதியுளி. கூ.
தூரலின்பெயர்—இடங்கழி, நெருங்கல். உ.

வர்வின்பெயர்—வியர்த்தல், சுவேதம், கசிவு. ௩. வருத்தந்தீர்தலி
ன்பெயர்-அயாவுயிர்த்தல். க. வடுப்படலின்பெயர்-கதுவாய்.க.
விடுதலின்பெயர்—உயிர்த்தல். க. அடங்கலின்பெயர்—ஒரு
ங்கு. க. சோர்வின்பெயர்-கயக்கு. க. வழுவின்பெயர்-பிறக்கு. க.

* அனந்தலெனினுமமையும்.

மூடுதல்கவித்தன்மூய்தன்மூடியவேபரத்தலூர்தல்
நீடியநானமென்பநிகழ்த்துமஞ்சனத்தினாமம்
ஆடலேபடிதறோய்தலாமிவைகுளித்தலென்ப
பீடறப்பிறகிடற்பேர்பிறக்கிடல்பின்றலாமே. (க

முடக்கமேமடங்கல்குத்திமுணங்கொடுநொறிலொடுக்கம்
அடக்கமாம்வதிதல்வைகலல்கலேயிறுத்தருழ்தல்
விடுத்தலாறுந்தங்கற்பேர்வசித்தலோடிறையுமப்பேர்
ஒடுக்கமேபதுங்கல்பாந்தலுரைத்தலேயுரிஞ்சறேய்த்தல். (க

மெலிவின்மைதுனம்புணர்ச்சிவிழைச்சொடுவிழைவுதல்லே
கலவியேகிரீடையாடல்காதலோர்கூட்டமெண்பேர்
புலவியேபுலத்தலென்பவூடலுமதன்பொருட்டே
நலமிகுதுனியெனுஞ்சொனாட்டியபுலவிநீட்டம். (க

கூடியுங்கூட்டமின்மைகுலவியபுலவியென்ப
ஊடலேநணுகாராகியுரைமறுத்திருத்தலாகும்
ஆடவர்நீங்கவுள்ளேயடைத்துறறுனியேயென்பர்
ஊடலைத்தீர்த்தலின்பேருணர்த்தலேயொல்லலாகும். (க

வந்தனம்பணிதல்காணல்வழிபடல்பணிவிறைஞ்சல்
தந்தலைவணங்கல்பார்த்தருழ்தலொன்பானுந்தண்டன்
முந்தியதழுவல்விள்ளன்முயங்கலாலிங்கனப்பேர்
அந்தமாத்தொழல்கைகூப்பலஞ்சலிகும்பிடற்பேர். (க

துஞ்சலேவீடன்மாளல்சொற்றிடும்விளிவுவீவு
முஞ்சலேயுலத்தல்பொன்றன்முடிதலேதுவன்றன்மாய்தல்
எஞ்சியமரணம்வியோகமில்லெனல்கழிவிறத்தல்
அஞ்சியதபுதல்சாவினபிதானம்பன்னேழாமே. (உ

பரிதலேஞெமிர்தல்பற்றுதொடிதலேயிடிதல்சால
முரிதலேயிறுதலாறுமுறிதலேயொசிதலும்பேர்
இரிதலேநெரிதல்சோரலிடைதலேயுடைதலோடு
சரிதலேகெடுதலேழுஞ்சாய்தலினாமமாமே. (உ

ஒசித்தலேயகைத்தல்கோடலொடித்தலேமுறித்தலின்பேர்
இசித்தலேஞெமிர்த்தலோடேயிறுத்தலுமதன்பேரென்ப
ஒசிந்திடலசைதல்சாய்ந்தேயுவளலுந்துவளலாமே
இசைப்பின்பேர்புணர்ச்சிமற்றையிசைவுமாமியையுமாமே. (உ

டுதலின்பெயர்—கவித்தல், மூய்தல். உ.
ாத்தலின்பெயர்—ஊர்தல். க. மஞ்சனத்தின்பெயர்—நானம். க.
ளித்தலின்பெயர்—ஆடல், படிதல், தோய்தல். ங.
றகிடலின்பெயர்—பிறக்கிடல், பின்றல். உ.

டக்கத்தின்பெயர்—முடக்கம், மடங்கல், குத்தி, முணங்கு, நொ
றில், ஒடுக்கம். சு.
ங்கலின்பெயர்—வதிதல்,வைகல்,அல்கல்,இறுத்தல்,தாழ்தல்,விடு
த்தல், வசித்தல், இறை. அ. பாந்தலின்பெயர்—ஒடுக்கம், பது
ங்கல். உ. தேய்த்தலின்பெயர்—உரைத்தல், உரிஞ்சல். உ.

ாதலோர்கூட்டத்தின்பெயர்—மைதுனம், புணர்ச்சி, விழைச்சு,
விழைவு, தல், கலவி, கிரீடை, ஆடல். அ.
லத்தலின்பெயர்—புலவி, ஊடல். உ.
லவிநீட்டத்தின்பெயர்—துனி. க.

டியுங்கூட்டமின்மையின்பெயர்—புலவி. க.
ணுகாராகியுரைமறுத்திருத்தலின்பெயர்—ஊடல். க.
டவர்நீங்கவுள்ளேயடைத்திருத்தலின்பெயர்—துனி. க.
ஊடலைத்தீர்த்தலின்பெயர்—உணர்த்தல், ஒல்லல். உ.

ண்டனிடலின்பெயர்—வந்தனம், பணிதல், காணல், வழிபடல்,
பணிவு, இறைஞ்சல், வணங்கல், பார்த்தல், தாழ்தல். கூ.
ஆலிங்கனத்தின்பெயர்—தழுவல், விள்ளல், முயங்கல். ங.
நம்பிடலின்பெயர்—தொழல், கைகூப்பல், அஞ்சலி. ங.

ாவின்பெயர்—துஞ்சல், வீடல், மாளல், விளிவு, வீவு, முஞ்சல்,
உலத்தல், பொன்றல், முடிதல், துவன்றல், மாய்தல், மரணம்,
வியோகம், இல்லெனல், கழிவு, இறத்தல், தபுதல். கஎ.

முறிதலின்பெயர்—பரிதல், ஞெமிர்தல், ஒடிதல், இடிதல், முரிதல்,
இறுதல், ஓசிதல். எ.
சாய்தலின்பெயர்—இரிதல், நெரிதல், சோரல், இடைதல், உடை
தல், சரிதல், கெடுதல். எ.

முறித்தலின்பெயர்—ஓசித்தல், அகைத்தல், கோடல், ஒடித்தல்,
இசித்தல், ஞெமிர்த்தல், இறுத்தல். எ.
துவளலின்பெயர்—ஓசிந்திடல், அசைதல், உவளல். ங.
இசைப்பின்பெயர்—புணர்ச்சி, இசைவு, இயைபு. ங.

வசப்படவலித்தல்சூழ்தல்வளாகமும்வளைத்தன்முப்பேர்
இசைத்திடிற்பிடித்தலின்பேர்தொடல்பற்றலிருபேராகும்
விசித்தலைத்தொடுத்தல்பந்தம்வீக்குதல்சிமிழ்த்தல்யாப்பே
அசைத்தலைப்பிணித்தலார்த்தலொன்பதுங்கட்டலாமே. (௨௩)

அரிதலின்பேர்சேதித்தலறுத்திடல்விடுவாய்செய்தல்
விரிவுறச்சூலல்கொய்தல்விதியுளியீர்தலாறும்
பரிதல்கண்டித்தலோடுபகுத்திடறடிதலெற்றல்
தரமுறத்துமித்தலாறும்வெட்டலாந்தறித்தலும்பேர். (௨௪)

கீறலைக்கிளல்கீண்டல்கிழித்திடல்கீன்றல்கீழ்தல்
பீறலாறும்பேர்மற்றுப்பிளிறலைஞெண்டல்கிண்டல்
மாறிடக்கிளைத்தன்முப்பேர்வரன்றறெள்ளுதல்கொழித்தல்
ஆறலைவழிப்பறித்தலதர்கோளுமப்பேராமே. (௨௫)

கட்டலைகளைதல்குற்றல்பறித்தல்கத்தரித்தல்கொய்தல்
குட்டலைதகர்த்தலாகுமுடைத்தலுங்கூறுமப்பேர்
தொட்டலையகழ்தலோடுதொடுதறோண்டுதலின்பேராம்
தட்டல்வாரித்தலாணைதகைதலைதடுத்தலின்பேர். (௨௬)

அடுத்ததுப்புரவுந்துவ்வுமைம்பொறிநுகர்வவாகும்
விடுத்தன்மோசனமேமோக்கம்வீதமாந்தீர்தலும்பேர்
அடுக்குதற்பேரேயேற்றலாமோவலொழிதலென்ப
நடுக்குறத்தாழ்தலின்பேர்குரங்குதல்குனிவுநாட்டும். (௨௭)

வலத்தலைநிணத்தலென்பமுடைதலாமாற்றலின்பேர்
விலக்கலாமிசையின்பேரேமீமிசையாந்தாபித்தல்
நிலைப்படச்செய்தலின்பேர்நிறுத்தலைநோன்றலென்ப
சொலித்திடலிடத்தலாகுந்துவர்தலைவகிர்தலென்ப. (௨௮)

சிதர்த்தலையுகுத்தறூவல்சிந்தலையுளர்தலும்பேர்
எதிர்த்துவீசுதலையோச்சல்செலவிடலெறிதன்முப்பேர்
இதத்தொடுபொருத்தன்மாட்டலிருபெயர்மூட்டலென்ப
நுதுத்தலைநொதுத்தலோடுநவித்தலுமவித்தற்பேரே. (௨௯)

புடைத்தலையெறிதலெற்றல்பொத்தெனக்குத்தன்முப்பேர்
அடித்தலைக்கொட்டன்மொத்தலறைதலையகைத்தலெற்றல்
பிடித்தனரதுக்கன்மோதல்பேசியவழுக்கலென்ப
வடித்தலைவசமாக்கற்பேர்மழித்தன்முண்டிதமேயாக்கல். (௩௦)

ளத்தலின்பெயர்—வலித்தல் சூழ்தல், வளாகம். ங.
டித்தலின்பெயர்—தொடல், பற்றல். உ.
டலின்பெயர்—விசித்தல், தொடுத்தல், பந்தம்,வீக்குதல்,சிமிழி
த்தல், யாப்பு, அசைத்தல், பிணித்தல், ஆர்த்தல். கூ.

ிதலின்பெயர்—சேதித்தல், அறுத்திடல், விடுவாய்செய்தல்,
குலல், கொய்தல், ஈர்தல். கூ.
பட்டலின்பெயர்—பரிதல், கண்டித்தல், பகுத்திடல், தடிதல்,
எற்றல், துமித்தல், தறித்தல். எ.

றலின்பெயர்-கிளல், கிண்டல், கிழித்திடல்,கீன்றல்,கிழ்தல்,பீறல்.
ளத்தலின்பெயர்—பிளிறல், ஞெண்டல், கிண்டல். ங.
காழித்தலின்பெயர்—வரன்றல், தெள்ளுதல். உ.
ழிப்பறித்தலின்பெயர்—ஆறலை, அதர்கோள். உ.

றித்தலின்பெயர்-கட்டல், களைதல், குற்றல்.ங. கத்தரித்தலின்பெ
யர்-கொய்தல்.க.குட்டலின்பெயர்—தகர்த்தல்,உடைத்தல். உ.
தாண்டுதலின்பெயர்—தொட்டல், அகழ்தல், தொடுதல். ங.
டுத்தலின்பெயர்—தட்டல், வாரித்தல், ஆணை, தகைதல். ச.

ம்பொறிநுகர்வின்பெயர்—துப்புரவு, துவ்வு. உ.
விடுத்தலின்பெயர்—மோசனம், மோக்கம், வீதம், தீர்தல். ச.
டுக்குதலின்பெயர்—ஏற்றல். க. ஒழிதலின்பெயர்—ஓவல். க.
ாழ்தலின்பெயர்—குரங்குதல், குனிவு. உ.

றடைதலின்பெயர்-வலத்தல், நிணத்தல்.உ.மாற்றலின்பெயர்-வில
க்கல். க. மிசையின்பெயர்-மீமிசை. க. நிலைப்படச்செய்தலின்
பெயர்—தாபித்தல். க. நிறுத்தலின்பெயர்—நோன்றல். க.
சாலித்திடலின்பெயர்-இடத்தல்.க.வகிர்தலின்பெயர்-துவர்தல்.க

ிந்தலின்பெயர்—சிதர்த்தல், உகுத்தல், தூவல், உளர்தல். ச.
வீசுதலின்பெயர்—ஓச்சல், செலவிடல், எறிதல். ங.
முட்டலின்பெயர்—பொருத்தல், மாட்டல். உ.
நவித்தலின்பெயர்—நதுத்தல், நொதுத்தல், நவித்தல். ங.

நத்தலின்பெயர்—புடைத்தல், எறிதல், எற்றல். ங.
அடித்தலின்பெயர்—கொட்டல், மொத்தல், அறைதல், அகைத்தல்,
எற்றல், அதுக்கல், மோதல், வழுக்கல். அ. வசமாக்கலின்பெயர்-
வடித்தல். க. முண்டிதமாக்கலின்பெயர்—மழித்தல். க.

அளித்தல்பாதீடுபெய்தலாமுப்பேர்செறித்தலென்ப
துளைத்தலின்பேர்திளைத்தல்குயிறலாந்தொள்ளலும்பேர்
வளைத்தலேகவர்தல்வெளவல்வாருதல்கொளலுமாகும்
கிளைத்துங்காற்குறைகொண்டிகேடுறுங்கொள்ளையாமே. (௩

வருடறைவரலேல்நீவல்வருமுப்பேர்தடவலாகும்
விரியலேபரத்தலென்பவிளம்புபாரித்தலும்பேர்
தெரியவேதோண்டனோண்டல்சேரவேமுகத்தலின்பேர்
சொரிதலேபொழிதறூவறுயல்வரலசைதலின்பேர். (௩௨

திதிநிலைபெறுத்தனோக்கல்சிறப்பொடுபுரத்தனுன்கும்
விதமுடன்காத்தலின்பேர்வேலியேயேமஞ்சேமம்
க்ஷவரண்காப்புத்தட்டிகடியெட்டுங்காவற்பேரே
பதமுறவோம்பல்போற்றல்பாதுகாத்தற்பேராகும். (௩௩

பகுத்தலேபாத்துப்பாகம்பங்கிடுபாதியும்பேர்
இகுத்தலேவிரித்தலின்பேரேற்றிடும்பொதிதல்வீக்கம்
மிகைப்படப்புதைத்தலின்பேர்தணித்தல்சேமித்தலென்ப
திகைக்கவேயவைத்தல்குற்றறெறுதலென்பதுநெரித்தல். (௩௪

எருக்கல்காதுதல்சவட்டலெற்றுதலொழித்தல்கோறல்
முருக்கல்வீட்டுதல்படுத்தன்முதிர்கொலைசெய்தலொன்பான்
உரைத்தமாரணமுமப்பேருறுகோளணங்குவேட்டம்
விரித்திடிற்கொலையினுற்பேர்வேட்டைபாபத்தியென்ப. (௩௫

குடமேமெய்கோட்டிக்கையைக்குவித்தலினுமந்தானே
கடுகியநாடனேடல்கையரிக்கொளலேதேடல்
தொடர்புறுதுருவுமாகுந்துவட்டலேநுடக்கலென்ப
தொடுதலேதிவளலூறுபரிசனந்துவளலும்பேர். (௩௬

கடத்தலேபடர்தல்சேறல்கழிதலேயிவறலேகல்
விடுத்திடலிறத்தல்போகன்மெல்லெனவழங்கனீங்கல்
தடத்தினிற்செலவேயில்லறணத்தலேயியங்கறீர்தல்
நடத்தலின்பேரீரெட்டாமொதுங்கலுநாட்டுமப்பேர். (௩௭

மிதித்திடலுகளல்பாய்தல்விரைவுடனேயுறுக்கல்
குதித்தலின்பேரேநான்காங்குப்புறலிதுவுமப்பேர்
கதித்தலேயகைத்தல்பம்பல்களுறலேபொலிவுபாய்ச்சல்
இதத்துடனெதுக்கலேர்பென்றெட்டுமேயெழுச்சியின்பேர். (௩௮)

ரித்தலின்பெயர்—அளித்தல், பாதீடு, பெய்தல். ௩.
ாத்தலின்பெயர்—திளைத்தல், குயிறல், தொள்ளல். ௩.
நதலின்பெயர்—வளைத்தல், கவர்தல், வௌவல், கொளல். ௪.
ள்ளையின்பெயர்—சூறை, கொண்டி. ௨.

வலின்பெயர்—வருடல், தைவரல், நீவல். ௩.
ந்தலின்பெயர்—விரியல், பாரித்தல். ௨.
த்தலின்பெயர்—தோண்டல், நோண்டல். ௨. தூவலின்பெ
ர்-சொரிதல்,பொழிதல். ௨. அசைதலின்பெயர்-துயல்வரல். ௧.

ந்தலின்பெயர்—திதி, நிலைபெறுத்தல், நோக்கல், புரத்தல். ௪.
லின்பெயர்—வேலி, ஏமம், சேமம், கதவு, அரண், காப்பு,
ட்டி, கடி. ௮.
புகாத்தலின்பெயர்—ஓம்பல், போற்றல். ௨.

த்தலின்பெயர்—பாத்து, பாகம், பங்கீடு, பாதி. ௪.
த்தலின்பெயர்—இருத்தல். ௧. பொதிதலின்பெயர்-வீக்கம். ௧.
தத்தலின்பெயர்—தணித்தல், சேமித்தல். ௨.
றலின்பெயர்-அவைத்தல். ௧. நெரித்தலின்பெயர்-தெறுதல். ௧.

லைசெய்தலின்பெயர்—எருக்கல், காதுதல்,சவட்டல், எற்றுதல்,
ழித்தல், கோறல், முருக்கல், வீட்டுதல், படுத்தல், மாரணம். ௧௦.
லையின்பெயர்—ஊறு, கோள், அணங்கு, வேட்டம். ௪.
ட்டையின்பெயர்—பாபத்தி. ௧.

ய்கோட்டிக்கைகுவித்தலின்பெயர்—குடம். ௧.
லின்பெயர்—நாடல், நேடல், கையரிக்கொளல், துருவு. ௪.
ட்டலின்பெயர்—நுடக்கல். ௧.
டுதலின்பெயர்—திவளல், ஊறு, பரிசனம், துவளல். ௪.

த்தலின்பெயர்—கடத்தல், படர்தல், சேறல், கழிதல், இவறல்,
கல், விடுத்திடல், இறத்தல், போகல், வழங்கல், நீங்கல்,
செலவு, இல்லல், தணத்தல், இயங்கல், தீர்தல், ஒதுங்கல். ௧௭.

த்தலின்பெயர்—மிதித்திடல், உகளல், பாய்தல், உறுக்கல்,
தப்புறல். ரு.
ச்சியின்பெயர்—கதித்தல், அகைத்தல், பம்பல், கஞறல், பொ
லிவு, பாய்ச்சல், ஒதுக்கல், ஏர்பு. ௮.

கடுமையேகதழ்வுவல்லைகதனமேதுரிதமொல்லை
அடைவுளநொறிலென்றேழுங்கடுப்பெனவறையலாகும்
முடுகலேவிசையேதாரைமுந்தியகவனம்வேகம்
சடிதிசீக்கிரமேயீண்டேவிரைவின்பேர்விதுப்புஞ்சாற்றும். (ரு

ஐயெனலொடுபொள்ளென்றலானசுத்திரமேசண்டம்
நொய்தென்றல்கதுமென்றிட்டஞொடியினிற்பொருக்கென்றிட்ட
வெய்தென்றன்ஞெள்ளல்கோரம்விரைவினிற்குறிப்புப்பத்தாம்
மொய்யெனலொடுமெல்லென்றல்பையெனருழ்த்தன்மந்தம். (ச

தெருமரன்மறுகலோடேயலமரறிரிதல்கொட்கல்
சொரிதலேசூர்த்தலோடுபிரமரிசுழலலெட்டாம்
பரிகரிதாவல்சேறல்பாறுதலோவன்மீளல்
வரிசையிற்ருண்டறத்தல்வாவருவுதல்கடத்தல். (ச

நீதியிற்பாறலோடணிமிர்தனீளுதலுமப்பேர்
ஆதியேவீதியென்பவிருபெயரிவைநேரோடல்
மாதிசாரிகையேசுற்றுவாளிமண்டலமாவோடல்
ஓதியபவனியொன்றேயுலாப்போதலாகுமென்ப. (ச

மருவுதனண்ணல்சார்தன்மற்றையவணுகல்புல்லல்
அருகுறல்சிவணருன்னலண்ணலொன்பான்பேர்கிட்டல்
ஒருவுதறுறத்தல்வல்லியுணர்வொடுதணப்புநீங்கல்
வருமுறையுலாவலின்பேர்வழங்கலோடசைதலாமே. (ச

நடவலேயுகைத்தலொய்தனல்மொடுதூண்டலூர்தல்
கடவலேபகைத்தலுய்த்தல்கடிதோட்டல்செலுத்தலொன்பான்
உடனூராய்ப்போதலின்பேருரிஞ்சலோடுரோஞ்சலாகும்
படியவேநெகிழ்தலொல்கலிருபெயர்குழைவின்பாலாம். (ச

ஆற்றறுத்திடுதருனேயாம்வலியழித்தலின்பேர்
ஆற்றியவழிப்படுத்தற்பெயராற்றுப்படையென்ருகும்
ஏற்றல்போதரலெனுஞ்சொல்லெதிர்கொடுபோதலென்ப
மாற்றியவுழுதலோடுமடித்தலேயுழக்கலாகும். (ச

முரண்வினைசமரேயார்ப்புமொய்தும்பைஞாட்புத்தாக்குச்
செருமறல்காளபங்கள்சினவலேயமர்மலைப்போ
டிரணமாகவநிகர்த்தலிகலேவெஞ்சமமுடன்றல்
பொருதல்சங்கிராமந்தெவ்வுப்பூசலாயோதனம்போர். (ச

ெப்பின்பெயர்—கடுமை, கதழ்வு, வல்லை, கதனம், துரிதம்,ஒல்லை, நொறில். எ.
ரைவின்பெயர்—முடுகல், விசை, தாரை, கவனம்,வேகம்,சடிதி, சீக்கிரம், ஈண்டு, விதுப்பு. கூ.

ரைவுக்குறிப்பின்பெயர்—ஐயெனல், பொள்ளென்றல்,குத்திரம், சண்டம், நொய்தென்றல், கதுமென்றிட்டல், பொருக்கென்றிட்டல், வெய்தென்றல், ஞெள்ளல், கோரம். ௧௦. மந்தத்தின்பெயர்—மொய்யெனல், மெல்லென்றல், பையெனல், தாழ்த்தல். ச.

ழலவின்பெயர்—தெருமரல், மறுகல், அலமரல், திரிதல், கொட்கல், சொரிதல், சூர்த்தல், பிரமரி. அ.
-த்தலின்பெயர்—பரிகரி, தாவல், சேறல், பாறுதல்,ஓவல்,மீளல், தாண்டல், தத்தல், வாவல், தாவுதல். ௧௦.

-லின்பெயர்—பாறல், நிமிர்தல், நீளுதல். ௩.
ரோடலின்பெயர்—ஆதி, வீதி. உ.
ண்டலமாவோடலின்பெயர்—மாதி, சாரிகை, சுற்று, வாளி. ச.
லாப்போதலின்பெயர்—பவனி. க.

ட்டலின்பெயர்—மருவுதல், நண்ணல், சார்தல்,அணுகல்,புல்லல், அருகுறல், சிவணல், துன்னல், அண்ணல். கூ.
ங்கலின்பெயர்—ஒருவுதல், துறத்தல்,வல்லி,உணர்வு, தணப்பு. ௫.
லாவலின்பெயர்—வழங்கல், அசைதல். உ.

லுத்தலின்பெயர்—நடவல், உகைத்தல், ஒய்தல், தூண்டல், ஊர்தல், கடவல், அகைத்தல், உய்த்தல், ஓட்டல். கூ.
ராய்ப்போதலின்பெயர்—உரிஞ்சல், உரோஞ்சல். உ.
ழைவின்பெயர்—நெகிழ்தல், ஒல்கல். உ.

லியழித்தலின்பெயர்—ஆற்றறுத்தல். க.
திப்படுத்தலின்பெயர்—ஆற்றுப்படை. க.
ர்கொடுபோதலின்பெயர்—ஏற்றல், போதரல். உ.
ழக்கலின்பெயர்—உழுதல், மடித்தல். உ.

ாரின்பெயர்—முரண், வினை, சமர், ஆர்ப்பு, மொய், தும்பை, ஞாட்பு, தாக்கு, செரு, மறல், காளபம், சினவல், அமர், மலைப்பு, இரணம், ஆகவம்,நிகர்த்தல், இகல், சமம், உடன்றல், பொருதல், சங்கிராமம், தெவ்வு, பூசல், ஆயோதனம். உ௫.

முட்டுதலுடனே தாக்கறலைப்படன் முடுகலேற்றல்
கிட்டலையெதிர்தலாகுங்கிடைத்தலுமதன்பேர்தானே
ஒட்டலர்நாடழித்தலுற்றபேர்கொற்றவள்ளை
ஒட்டுநர்மேற்சாராமையுரைத்தபேர்தழிஞ்சியாமே. (சa

நடநட்டநடனம்வாணிநாடகநிருத்தந்தூக்குப்
படிதநாட்டியமேகண்ணுள்பத்துந்தாண்டவமுங்கூத்தாம்
நடையுநட்டணமுமப்பேர்நடித்திடல்பெயர்தலாலல்
அடைவிலேயகவறுங்கலசைவொடாறிவையாடற்பேர். (சஅ

பிரமரிவீரட்டானம்பேசிலுப்பிதமலைப்புப்
புரியமேயிலயமற்றும்போற்றுமுள்ளாளனம்மே
கரணமேபரதமொன்பான்கருதுகூத்தின்விகற்பம்
பருமித்தல்சிரமஞ்செய்தல்பழகலையுழத்தலென்ப. (சகூ

கொடுகொட்டிபாண்டரங்கங்கூறுகாபாலமூன்றும்
பொடியணிசிவனிருத்தம்போற்றியப்ரவைசெய்யாள்
குடமல்லோடல்லியந்தான்கொண்டல்வண்ணன்றன்கூத்தாம்
குடையொடுதுடியிரண்டுங்குமரனதாடலாமே. (ருo

துடியென்பதெழுவர்மாதர்தூங்கலினுமமாகும்
கடையமேயயிராணிக்குக்காட்டியநாட்டியப்பேர்
வடிவமைதுர்க்கைதூக்குமற்றதுமரக்காலென்ப
நெடியகாமன்கொண்டாடுநிருத்தமேவிதித்தபேடாம். (ருக

அடுத்திடும்வெறிகழங்கோடணங்கிவைவெறியாட்டின்பேர்
தொடுத்தகைகோத்தாடற்பேர்சொல்லியகுரவையென்ப
முடக்கியவிருகைதானும்பழுப்புடைமுறையேயொற்றித்
துடக்கியநடையினமந்துணங்கையென்றியம்பலாமே. (ருஉ)

குடந்தங்கைகூப்பிமெய்யைக்கோப்பொடுகோட்டிநிற்றல் [ம்
குடங்கையைக்குவித்துக்கொட்டல்கொம்மைகொட்டுதலென்றுரு
அடர்ந்துவாய்கையாற்கொட்டலாவலங்கொட்டலென்ப
படங்குந்திநிற்றலின்பேர்பகரிற்குஞ்சித்தலாமே. (ருங)

வட்டித்தலொற்றறுத்தல்வட்டணையுடனேமற்றும்
தட்டலென்றிந்தநான்குந்தாளம்போடுதலின்பேரே
கிட்டியதாளவொற்றுக்கிளந்தபேர்சதியேசீரென்
றிட்டபேரிரண்டுமாமென்றியம்பினர்வியந்தநூலோர். (ருங)

ர்தலின்பெயர்—முட்டுதல், தாக்கல், தலைப்படல், முடுகல், எற்
றல், கிட்டல், கிடைத்தல். எ.
டலர்நாடழித்தலின்பெயர்—கொற்றவள்ளை. க.
டுநர்மேற்சாராமையின்பெயர்—தழிஞ்சி. க.

த்தின்பெயர்—நடம், நட்டம், நடனம், வாணி, நாடகம், நிருத்
தம், தூக்கு, படிதம், நாட்டியம், கண்ணுள், தாண்டவம், நடை,
ட்டணம். கங. ஆடலின்பெயர்-நடித்திடல், பெயர்தல், ஆலல்,
அகவல், தூங்கல், அசைவு. சூ.

த்தின்விகற்பத்தின்பெயர்—பிரமரி, வீரட்டானம், உப்பிதம்,
லைப்பு, புரியம், இலயம், உள்ளாளனம், கரணம், பரதம். கூ.
மஞ்செய்தலின்பெயர்—பருமித்தல். க.
கலின்பெயர்—உழத்தல். க.

னிருத்தத்தின்பெயர்—கொடுகொட்டி, பாண்டரங்கம், காபா
லம். ங. திருமகளாடலின்பெயர்—பரவை. க.
ாண்டல்வண்ணன்கூத்தின்பெயர்—குடம், மல், அல்லியம். ங.
ரனாடலின்பெயர்—குடை, துடி. உ.

வகைமாதராடலின்பெயர்—துடி. க.
பிராணியாடலின்பெயர்—கடையம். க.
க்கையாடலின்பெயர்—மரக்கால். க.
மனாடலின்பெயர்—பேடு. க.

றியாட்டின்பெயர்—வெறி, கழங்கு, அணங்கு. ங.
கோத்தாடலின்பெயர்—குரவை. க.
டக்கியவிருகைபழுப்புடையொற்றியாடலின்பெயர்-துணங்கை.

கூப்பிமெய்கோட்டிநிற்றலின்பெயர்—*குடந்தம். க.
டங்கையைக்குவித்துக்கொட்டலின்பெயர்—கொம்மை,கொட்டு
தல். உ. வாய்கையாற்கொட்டலின்பெயர்-ஆவலங்கொட்டல்.க.
ந்திநிற்றலின்பெயர்—குஞ்சித்தல். க.

ளம்போடலின்பெயர்—வட்டித்தல், ஒற்றறுத்தல், வட்டணை,
தட்டல். ச.
ளவொற்றின்பெயர்—சதி, சீர். உ.

---

* குடந்தம் நால்விரல்முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடை
வத்து மெய்கோட்டிநிற்றல்.

உவளித்தறூய்மைசெய்தலுபலாளனம்மூமப்பேர்
இவர்தலேமீக்கோளென்பவிரண்டுமேறுதலினாமம்
அவாமற்றுமிறங்குதற்பேர்சுதமவதாரமாகும்
மவுனப்பேர்மூகமோனம்வாளாகேளாவென்றுமே. (ருரு

திறைமிறைகப்பமேபாகுடமரசிறைப்பேர்செப்பும்
கறைகடன்வரியிறுப்புக்கரங்குடியிறையைந்தேபேர்
துறைபடுமுல்கேயாயஞ்சுங்கஞ்சாரிகையுமாகும்
நெறியொடுவலித்தலொட்டனேரலேயுடன்பாடென்ப. (ருசு

முயற்சிதாளாண்மையூக்கமுந்துதாளுத்தியோகம்
இயற்றலேயுஞற்றுழப்போடாள்வினையிவையுற்சாகம்
வியக்குமூராண்மையொன்றேமிகவோங்கிச்சேறலாகும்
நயக்கும்பேராண்மையொன்றேநாட்டியவருமைசெய்தல். (ருஎ

கரப்பொடுகட்டல்பட்டிகரவடங்கயவுகள்ளம்
திருட்டொடுபடிறுசோரந்தேயமுங்களவீரைந்தாம்
விரித்திடுந்தேனுவோடுசௌரியமீண்டுமப்பேர்
தரித்தசம்பிரதமென்பதக்கதாஞ்சித்தின்பேரே. (ருஅ

தரித்தலேபொறுத்தலோடுதாங்குதல்சுமத்தலின்பேர்
பரித்தலுமாகுமென்பபருவரலருவலின்பேர்
தெரித்தொன்றைவரைவேநீக்கறெற்றலேமாறுபாடாம்
விரித்திடுந்தைத்தலத்துமேவியபொல்லந்துன்னம். (ருகூ

சுறுக்கெனச்சுடல்சந்தாபந்தூபிதமிருபேர்சொல்லும்
மறைப்பேயாவரணமாகுமாய்த்தலுமப்பேர்தானே
நெறிப்படவுழுந்துதற்பேர்ஞெமுங்குதலென்றுகூறும்
மிறைத்தலேயகைத்தல்சாலவேதனையுலைப்புமுப்பேர். (சு0

நாம்பலேபழங்கணோடுநாட்டியமெலிவுஞோள்கல்
தேம்பலேகிருசம்போதச்சிக்கலேழிளைத்தலின்பேர்
சாம்பலேகூம்பலென்பவிருபெயரொடுங்கல்சாற்றும்
மேம்படச்சொல்லுகின்றமேற்கோளேபூட்கையென்ப. (சுக

வருட்டலேதெருட்டலின்னவற்புறுத்தற்பேர்தானே
உருத்தலேநாறறோற்றன்முளைத்தலாம்பொடித்தலும்பேர்
விரித்திடலெதிர்தல்விள்ளலவிழ்தலேயலர்தலாகும்
தரிப்பறநூக்கலூன்றனோன்றலுந்தள்ளன்முப்பேர். (சுஉ

ரய்மைசெய்தலின்பெயர்—உவளித்தல், உபலாளனம். உ.
று தலின்பெயர்—இவர்தல், மீக்கோள். உ.
றங்குதலின்பெயர்—அவா, சுதம், அவதாரம். ங.
மளனத்தின்பெயர்—மூகம், மோனம், வாளா, கேளா. ச.

ரசிறையின்பெயர்—திறை, மிறை, கப்பம், பாகுடம். ச.
;டியிறையின்பெயர்—கறை, கடன், வரி, இறுப்பு, கரம். ரு.
ங்கவிறையின்பெயர்—உல்கு, ஆயம், சாரிகை. ங.
டன்பாட்டின்பெயர்—வலித்தல், ஒட்டல், நேரல். ங.

ற்சாகத்தின்பெயர்—முயற்சி, தாளாண்மை, ஊக்கம், தாள், உத்
தியோகம், இயற்றல், உஞற்று, உழப்பு, ஆள்வினை. கூ.
ிக்கசெயலின்பெயர்—ஊராண்மை. க.
ருமைசெய்தலின்பெயர்—பேராண்மை. க.

ளவின்பெயர்—கரப்பு, கட்டல், பட்டி, கரவடம், கரவு, கள்ளம்,
திருட்டு, படிறு, சோரம், தேயம், தேனு, சௌரியம். கஉ.
ித்தின்பெயர்—சம்பிரதம். க.

:மத்தலின்பெயர்—தரித்தல், பொறுத்தல், தாங்குதல், பரித்தல். ச.
ருவலின்பெயர்—பருவரல். க.
'க்கலின்பெயர்—வரைவு. க. மாறுபாட்டின்பெயர்—தெற்றல். க.
ததத்தலின்பெயர்—அத்து, பொல்லம், துன்னம். ங.

:டலின்பெயர்—சந்தாபம், தூபிதம். உ.
றைப்பின்பெயர்—ஆவரணம், மாய்த்தல். உ.
முழுந்துதலின்பெயர்—ஞெமுங்குதல். க.
.லைப்பின்பெயர்—மிறைத்தல், அகைத்தல், வேதனை. ங.

ிளைத்தலின்பெயர்—நாம்பல், பழங்கண், மெலிவு, ஞொள்கல்,
தேம்பல், கிருசம், சிக்கல். எ.
டுங்கலின்பெயர்—சாம்பல், கூம்பல். உ.
மற்கோளின்பெயர்—பூட்கை. க.

பற்புறுத்தலின்பெயர்—வருட்டல், தெருட்டல். உ.
முளைத்தலின்பெயர்—உருத்தல், நாறல், தோற்றல், பொடித்தல். ச.
மலர்தலின்பெயர்—விரித்திடல், எதிர்தல், விள்ளல், அவிழ்தல். ச.
ள்ளலின்பெயர்—நூக்கல், ஊன்றல், நோன்றல். ங.

முறுவலேநகையேயார்ப்புமூரலேயிளியேயாசம்
அறிவொடுசிரித்தலாறேயசியவமதிச்சிரிப்பாம்
குறியொடுவிடல்வியோகங்கூடலேயோகமென்ப
மறலரிலபரமோடுவருந்துவக்கிவைபிணக்காம். (௬௩

விற்றற்பேர்பகர்தல்கூறல்விலைநொடைமாறலைந்தாம்
ஒற்றுமைகுறிக்கோளென்பவொற்றுவேய்சொற்றபேரே
இற்றிவைநிற்கமற்றையிளைதலைக்காவற்பேரே
பெற்றிடல்பயத்தல்வாய்த்தல்கிடைத்தலாம்பேசுமுப்பேர். (௬௪

முளிதலேவறத்தலோடுமுதிர்ந்திடலுலரல்காய்தல்
பிளிற்றலேபில்கல்காலலுமிழ்தல்கொப்பளித்தற்பேரே
தளர்ச்சியாமறைபுகற்பேர்சரண்புகலாகுமென்ப
விளக்கியவியங்கோளேவல்வீதலேவறுமையெய்தல். (௬௫

அலைசலேஞெகிழ்தன்ஞொள்கலலையலேயாஞ்சியும்பேர்
உலைவுறுசொறிகண்டேதினவெனவிருபேரோதும்
கலவலேயளாவலோடுகலம்பகமேகலாவல்
துலைபெறுகின்றசங்கிரணமைந்துந்துழாவலின்பேர். (௬௬

விம்மியேயுமிழ்தல்கான்றன்மேவுமுற்காரஞ்சத்தி
அம்மலேசுவாசமூச்சாங்கொட்டாவியேயாவித்தல்
அம்மவிச்செயல்பற்றும்பேர்க்கறுபத்தேழ்விருத்தஞ்செய்தான்
மைம்முகிற்குணபத்திரன்றாள்வணங்குமண்டலவன்றானே. (௬௭

செயல்பற்றியபெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் – ௬அக.



பத்தாவது

## ஒலிபற்றியபெயர்த்தொகுதி.

காப்பு.

வலியுற்றவெவ்வினைப்பேர்மாற்றியேயநந்தஞானம்
பொலிவுற்றகேவலப்பெண்புணர்ந்துவீற்றிருந்தபோதன்
மலருற்றுநடந்தவாமன்மரைபுரைபாதம்போற்றி
ஒலிபற்றும்பெயர்க்கூட்டத்தையுணர்த்துவமிப்பாற்கேண்மின். (க

த்தலின்பெயர்—முறுவல், நகை, ஆர்ப்பு, மூரல், இளி, ஆசம். சு.
மதிச்சிரிப்பின்பெயர்—அசி. க.
டலின்பெயர்—வியோகம். க. கூடலின்பெயர்—யோகம். க.
க்கின்பெயர்—மறல், அரில், அபரம், துவக்கு. ச.

ற்றலின்பெயர்—பகர்தல், கூறல், விலை, நொடை, மாறல். ரு.
றுமையின்பெயர்—குறிக்கோள். க. ஒற்றின்பெயர்—வேய். க.
லக்காவலின்பெயர்—இளை. க.
டைத்தலின்பெயர்—பெற்றிடல், பயத்தல், வாய்த்தல். ௩.

ய்தலின்பெயர்—முளிதல், வறத்தல், முதிர்ந்திடல், உலரல். ச.
காப்பளித்தலின்பெயர்—பிளிற்றல்,பில்கல், காலல்,உமிழ்தல். ச.
றைபுகலின்பெயர்—சரண்புகல். க.
வலின்பெயர்—வியங்கோள்.க.வறுமையெய்தலின்பெயர்-வீதல்.க.

லையலின்பெயர்—அலைசல், ஞெகிழ்தல், ஞொள்கல், ஆஞ்சி. ச.
சாறியின்பெயர்—கண்டூதி, தினவு. உ.
ழாவலின்பெயர்—கலவல், அளாவல், கலம்பகம், கலாவல், சங்
கிரணம். ரு.

த்திசெய்தலின்பெயர்—உமிழ்தல், கான்றல், உற்காரம். ௩.
ச்சின்பெயர்—தும்மல், சுவாசம். உ.
காட்டாவின்பெயர்—ஆவித்தல். க.



# பெயர்ப்பிரிவு.



இ - ள். வலி உற்ற வெவ்வினைப் பேர் மாற்றி - வலிமைபொ
ருந்திய கடிய வினைகளின் பெயரை ஒழித்து—அநந்தஞானம்
பொலிவு உற்ற கேவலப்பெண் புணர்ந்து வீற்றிருந்த போதன் -
அனந்தஞானமானது பொலியப்பெற்ற கைவல்லியமாகிய பெண்
ணைச் சேர்ந்து வீற்றிருந்தருளிய ஞானியும்—மலர் உற்று நடந்த
காமன் - தாமரைமலரிலே பொருந்தி நடந்தருளிய அழகினையுடை
யவருமாகிய அருகக்கடவுளுடைய—மரை புரை பாதம் போற்றி -
தாமரைப்பூவைப்போலும் பாதங்களைத் துதித்து,—இப்பால் ஒலி
பற்றும் பெயர்க்கூட்டத்தை உணர்த்துவம் - இனி ஒலிபற்றிய
பெயர்த்தொகுதியை (யாம்) அறிவிப்போம்,—கேண்மின் - கேளு
ங்கள். எ - று. ஏ அசை.

மாற்றமேமொழியேகிரேவாணியேகதையெதிர்ப்புக்
கூற்றுரைபனுவல்செப்புக்குயில்விளுக்கிளவிகாதை
ஏற்றிடுநொடியியத்தோடிசைபறைவாக்குப்பாணி
தோற்றமாநுவலினோடுமூவேழுஞ்சொல்லின்பேரே. (

வசித்தல்பாசுரமேவார்த்தைவாசகம்வசனமும்பேர்
திசைப்படுமுறையேபாழிசிதைவிலாப்பதமென்றோதும்
இசைத்தலேபிதற்றல்பேசலியம்புதலிறுத்தலும்பேர்
விசைப்பின்மீதுரையேபல்கால்விளம்புதலாகுமென்ப. (

பழிச்சலேத்துதறுதித்தல்பரசுதல்பரவல்போற்றல்
வழுத்தறோத்திரமேமெச்சல்வாழ்த்தலாந்துதியுமேற்கும்
அழிப்பிலாவாசிவாழ்த்தேயாசிடையென்றுங்கூறும்
பழிச்சொலேசிறுசொறீச்சொற்பரிவாதம்பழித்தலென்ப. (

விரித்தலேகதைத்தலோடுமிழற்றுதல்விளம்பல்கூறல்
உரைத்தலேநொடித்தல்சாற்றலோதுதல்குயிறல்சொற்றல்
தெரித்தலேநவிலலோடுவலித்திடல்செப்பலாடல்
பரப்புடன்மொழிதலோடுபணித்தல்பன்னெட்டுஞ்சொல்லல். (௫

சாதம்வாய்வாய்மையாணைசத்தியந்திடம்வேளாண்மை
நீதியாநிலைமையுண்மைநிச்சயஞ்சரதமெய்ப்பேர்
வாதையாமிச்சைதள்ளல்வலக்காரம்வழுதுபெட்டுச்
சாதனைமாயம்வஞ்சஞ்சடம்பிசிபடிறுபொய்ப்பேர். (௬

படித்தல்வாசித்தலோதல்பாடலத்தியயனமும்பேர்
பிடித்தொன்றைவிடாதுபேசல்பிதற்றுதலென்றுபேரே
இடக்கரேமறைத்தசொற்பேரென்பகூகனமுமாமே
இடித்தலேகழறலென்பவிருபெயருறுதிச்சொல்லே. (௭

அம்பலேகௌவையேசலலர்பழிமொழிநாற்பேரே
அம்பலேசிலரறிந்திட்டதுபுறங்கூறலாகும்
அம்புவிப்பலருந்தூற்றுமம்மொழியலரேயென்ப
வெம்பியபெருஞ்சொல்லென்பமிகப்பலரறிசொல்லாமே. (௮

மிழலையேகுதலைகொஞ்சல்வினவுமுல்லாபமுற்ற
மழலையேயொற்றுநீங்கிவழுப்படநிரம்பாமென்சொல்
பிழைபடுங்கொடுவாய்குஞ்சம்பிசுனங்கொண்டியந்தொடுப்பு
விழைவிலாக்குறளையாறும்வெறும்புறங்கூற்றின்பேரே. (௯

ால்லின்பெயர்—மாற்றம், மொழி, கீர், வாணி, கதை, எதிர்ப்பு,
கூற்று, உரை, பனுவல், செப்பு, குயில், வினு, கிளவி, காதை,
நொடி, இயம், இசை, பறை, வாக்கு, பாணி, நுவல். உக.

சகத்தின்பெயர்—வசித்தல், பாசுரம், வார்த்தை, வசனம். ச.
த்தின்பெயர்—உரை, பாழி. உ.
பம்புதலின்பெயர்—இசைத்தல், பிதற்றல், பேசல், இறுத்தல். ச.
சொல்விளம்புதலின்பெயர்—மீதுரை. க.

ழ்த்தலின்பெயர்—பழிச்சல், ஏத்துதல், துதித்தல், பரசுதல்,
பரவல், போற்றல், வழுத்தல், தோத்திரம், மெச்சல், துதி. க0.
ழ்த்தின்பெயர்—ஆசி, ஆசிடை. உ.
ிந்தலின்பெயர்-பழிச்சொல், சிறுசொல், தீச்சொல், பரிவாதம். ச.

சால்லலின்பெயர்—விரித்தல், கதைத்தல், மிழற்றுதல், விளம்பல்,
கூறல், உரைத்தல், நொடித்தல், சாற்றல், ஓதுதல், குயிறல்,
சொற்றல், தெரித்தல், நவிலல், வலித்திடல், செப்பல், ஆடல்,
மொழிதல், பணித்தல். கஅ.

மய்யின்பெயர்—சாதம், வாய், வாய்மை, ஆணை, சத்தியம், திடம்,
வேளாண்மை, நிலைமை, உண்மை, நிச்சயம், சரதம். கக.
பாய்யின்பெயர்—மிச்சை, தள்ளல், வலக்காரம், வழுது, பெட்டு,
சாதனை, மாயம், வஞ்சம், சடம், பிசி, படிறு. கக.

டித்தலின்பெயர்—வாசித்தல், ஓதல், பாடல், அத்தியயனம். ச.
பிடாதுபேசலின்பெயர்—பிதற்றுதல். க.
றைத்தசொல்லின்பெயர்—இடக்கர், கூகனம். உ.
றுதிச்சொல்லின்பெயர்—இடித்தல், கழறல். உ.

பழிமொழியின்பெயர்—அம்பல், கௌவை, ஏசல், அலர். ச.
லரறிந்துபுறங்கூறலின்பெயர்—அம்பல் க.
பலருக்குூற்றலின்பெயர்—அலர். க.
பலரறிசொல்லின்பெயர்—பெருஞ்சொல். க.

ிரம்பாமென்சொல்லின்பெயர்—மிழலை, குதலை, கொஞ்சல், உல்
லாபம், மழலை. ரு.
புறங்கூறலின்பெயர்—கொடுவாய், குஞ்சம், பிசுனம், கொண்டியம்,
தொடுப்பு, குறளை. சு.

வழுவிலாச்சபதமாணைவஞ்சினமொடுவெட்டித்தல்
தழுவியபிரமாணஞ்சூள்சத்தியம்விரதமும்பேர் [பே
மொழிமைமூதுரைமுன்சொல்லு முதுசொல்லும் பழஞ்சொல்லு
பழமொழிமுதுமையாகும்படுங்கதைகாரணச்சொல். (௧

தரித்திடுந்திசைச்சொலென்பசாருந்தேசிகமென்றுகும்
விரிச்சியேவாய்ப்புளென்பமிக்கநற்சொன்னிமித்தம்
அரிப்புறப்பொரவழைத்தலறைகூவலாகுமென்ப
உரைத்திடுமுகமனின்பேருபசாரநயஞ்சம்மானம். (௧

வினவலேகடாவலாகும்விடையதற்கெதிர்மொழிப்பேர்
வினவொடுவிடையுங்கூடிவிரும்பியபொருள்சல்லாபம்
தனதுமேம்பாட்டுரைப்பேர்தானெடுமொழியென்றுமே
இனநகைநயச்சொலென்பவெய்துமேயசதியாடல். (௧உ

கடைப்பிடியோர்ப்புவேறுகாட்டியகுறிக்கோடேற்றம்
அடுத்தநற்பொருளிலாமையநர்த்தமேயாகுமென்ப
எடுத்தவாளாவெனுஞ்சொலிதுகேளாவாகுமென்ப
கொடுத்திடும்புனருத்திப்பேர்கூறியகூறலாமே. (௧௩

கூவலேயுளைத்தலோடுகுறுகவேயிகுத்தல்கேதல்
வாவெனல்கரைதலேயாகருடணமொடுவிளித்தல்
மேவுமற்றகவலொன்பான்வினவியேயழைத்தற்பேரே
ஆவலாற்கிழறுத்தலறைபோதலாகுமென்ப. (௧௪

தோற்றஞ்சேர்சுலோகமெய்ப்பேசொன்மாலைநாற்பேர்சொல்லும்
ஏற்றமேகியாதியென்பவியன்றமேம்பாட்டினமம்
ஊற்றமாஞ்சீர்த்திகீர்த்தியொளிபுகழ்மீக்கூற்றும்பேர்
மேற்றிகழ்சீர்த்திகீர்த்திமிகுபுகழிருபேராமே. (௧௫

இகமியாமதிமோவாழியிகுஞ்சின்முன்னிலையசைச்சொல்
இகமியாவரோபோமாதோடிருந்தோருமேழசைச்சொல்
புகலுங்காலொப்பிலாதபோலுமப்பொருட்டேயாகும்
நிகரிலாவொடுவுமோடுநேருமேயுடனிகழ்ச்சி. (௧௬

அம்மோடாந்தந்நும்மேயல்லால்வான்பாக்குத்தில்லே
எம்மோடேமன்னேபானேயும்மீரெட்டிடைச்சொல்லென்ப
அம்மோடிற்றற்றேயத்தேயல்வில்லன்னனேயையே
தம்நும்மேயவ்வேகுவ்வேசாரியையபன்மூன்றென்ப. (௧௭

தியத்தின்பெயர்—சபதம், ஆணை, வஞ்சினம், வட்டித்தல், பிர
மாணம், சூள், விரதம். எ. மூதுரையின்பெயர்—மொழிமை,
முன்சொல், முதுசொல், பழஞ்சொல். ச.
மொழியின்பெயர்-முதுமை.க.கதையின்பெயர்-காரணச்சொல்.

சைச்சொல்லின்பெயர்—தேசிகம். க.
ர்னிமித்தத்தின்பெயர்—விரிச்சி, வாய்ப்புள். உ.
பாரவழைத்தலின்பெயர்—அறைகூவல். க.
கமனின்பெயர்—உபசாரம், நயம், சம்மானம். ௩.

ஞவலின்பெயர்-கடாவல்.க. எதிர்மொழியின்பெயர்—விடை.க.
ஞவும்விடையுங்கூடியபொருளின்பெயர்—சல்லாபம். க.
ஈதுமேம்பாட்டைத்தானெடுத்துரைத்தலின்பெயர்-நெடுமொழி.
சதியாடலின்பெயர்—நகை, நயச்சொல். உ.

தற்றத்தின்பெயர்—கடைப்பிடி, ஓர்ப்பு, குறிக்கோள். ௩.
பாருளின்மையின்பெயர்—அநர்த்தம். க.
களாவென்பதின்பெயர்—வாளா. க.
றியதுகூறலின்பெயர்—புனருத்தி. க.

ழைத்தலின்பெயர்—கூவல், உளைத்தல், இகுத்தல், கேதல், வா
வெனல், கரைதல், ஆகருடணம், விளித்தல், அகவல். கூ.
ழறுத்தலின்பெயர்—அறைபோதல். க.

சான்மாலையின்பெயர்—தோற்றம், சீர், சுலோகம், மெய்ப்பு. ச.
ற்றத்தின்பெயர்—கியாதி.க. மேம்பாட்டின்பெயர்—ஊற்றம். க.
கழின்பெயர்—சீர்த்தி, கீர்த்தி, ஒளி, மீக்கூற்று. ச.
குபுகழின்பெயர்—சீர்த்தி, கீர்த்தி. உ.

மன்னிலையசைச்சொல்லின்பெயர்—இக, மியா, மதி, மோ, வாழி,
இகும், சின். எ. அசைச்சொல்லின்பெயர்—இக, மியா, அரோ,
போ, மாது, இருந்து, ஒரும், போல். அ.
டனிகழ்ச்சியிடைச்சொல்லின்பெயர்—ஒடு, ஓடு. உ.

)டைச்சொல்லின்பெயர்—அம், ஆம், தம், நம், நும், ஏ, அல், ஆல்,
வான், பாக்கு, தில், எம், ஏம், மன், பான், உம். கரு.
ாரியையின்பெயர்—அம், இற்று, அற்று, அத்து, அல், இல், அன்,
ஆன், ஐ, தம், நும், அ, கு. க௩.

கரமொடுகானேகாரங்காட்டியவகரமென்ப
தரமுறவெழுத்துக்கேற்றசாரியைநான்கேசாற்றும்
கருதிடிலையேயாலேகுவ்வொடின்னதுவேகண்ணே
விரவியவாறுந்தானேவேற்றுமையுருபினாமம். (க௮

என்னைகொலெவனேயாதேயிவையையக்கிளவிநாற்பேர்
உன்னிடிலவ்வேயிவ்வேயுவ்வொடுமூன்றுஞ்சுட்டாம்
மன்னியயாண்டும்யாங்குமற்றிடத்தையுறற்சொல்
என்னிளியேயேசிச்சீயேளனமிகழ்ச்சியாமே. (க௯

உலவியவிஞ்சைவித்தையூதியஞ்சாலமோதி
கலையுடனுறுதிகேள்வியிருநான்குகல்வியின்பேர்
நலமுறக்கெழுமல்கற்றனவிலலேபயிலலும்பேர்
பலமுறவோதலின்பேர்பாடமையாடலாமே. (௨௰

ஆதிநூலெழுதாக்கேள்வியாரணமோத்துச்சாகை
ஏதமில்சுருதிதன்னோடிருக்கிவையேழும்வேதம்
வேதநூற்பொருளினாமம்விதித்திடுஞானபாகை
ஆதியாங்கருமபாகையருத்தபாகையுமாமென்ப. (௨௧

மெய்தெரியாரணந்தான்வேதத்தின்ஞானபாகை
மையிலுட்பொருளினாமமற்றுபநிடதமென்ப
வைதிகம்வேதமுற்றமார்க்கமேபார்க்குங்காலை
ஐயமிலிருக்கினோடுபௌடிகமாதிவேதம். (௨௨

ஏமமாமிரண்டாம்வேதமிசைதைத்திரியத்தோடு
தோமிலாயசுவாமென்றுசொல்லுவர்நல்லநூலோர்
சாமமேமூன்றாம்வேதந்தகைபெறுகீதஞ்சாரும்
வாமமார்நான்காம்வேதமதர்வமாம்வகுக்குங்காலே. (௨௩

தந்துரைபுனைந்துரைத்தல்சார்முகவுரையினோடு
முந்தியபதிகமேநூன்முகமிவைபாயிரப்பேர்
அந்தமாமாகமத்தோடாரிடம்பிடகமற்றுத்
தந்திரம்பனுவலோடுசமயஞ்சூத்திரமுநூற்பேர். (௨௪

படலமேசருக்கங்காண்டம்பரிச்சேதமத்தியாயம்
இடரறுமிலம்பகங்கணூன்முடிபிருமுப்பேரே
தொடையடிவரையொன்றின்றிச்சூத்திரங்குறித்தயாப்பாம்
படிபுகழ்கின்றநூற்பாவகவலைப்பகருங்காலே. (௨௫)

ூத்தின்சாரியையின்பெயர்—கரம், கான், காரம், அகரம். ச.
பற்றுமையுருபின்பெயர்—ஐ, ஆல், கு, இன், அது, கண். கூ.

பச்சொல்லின்பெயர்—என்னை, கொல், எவன், யாது. ச.
ட்டின்பெயர்—அ, இ, உ. ந.
டத்தையச்சொல்லின்பெயர்—யாண்டு, யாங்கு. உ.
கழ்ச்சிச்சொல்லின்பெயர்—என், இளி, ஏயே, சிச்சீ, ஏளனம். ரு.

்வியின்பெயர்—விஞ்சை, வித்தை, ஊதியம், சாலம், ஓதி, கலை, உறுதி, கேள்வி. அ.
ற்றலின்பெயர்—கெழுமல், நவிலல், பயிலல். ந.
நலின்பெயர்—பாடம், மையாடல். உ.

வதத்தின்பெயர்—ஆதிநூல், எழுதாக்கேள்வி, ஆரணம், ஓத்து, சாகை, சுருதி, இருக்கு. எ.
வதநூற்பொருளின்பெயர்—ஞானபாகை, கருமபாகை, அருத்தபாகை. ந.

வதத்தின்ஞானபாகையின்பெயர்—ஆரணம். க.
வதத்துட்பொருளின்பெயர்—உபநிடதம். க.
வதமார்க்கத்தின்பெயர்—வைதிகம். க.
ுதிவேதத்தின்பெயர்—இருக்கு, பௌடிகம். உ.

)ரண்டாம்வேதத்தின்பெயர்—தைத்திரியம், யசு. உ.
டன்றும்வேதத்தின்பெயர்—சாமம். க. அது கீதநடையுள்ளது.
ான்காம்வேதத்தின்பெயர்—அதர்வம். க.

ாயிரத்தின்பெயர்—தந்துரை, புனைந்துரைத்தல், முகவுரை, பதிகம், நூன்முகம். ரு.
நூலின்பெயர்—ஆகமம், ஆரிடம், பிடகம், தந்திரம், பனுவல், சமயம், சூத்திரம். எ.

நூன்முடிபின்பெயர்—படலம், சருக்கம், காண்டம், பரிச்சேதம், அத்தியாயம், இலம்பகம். சூ.
சூத்திரயாப்பின்பெயர்—நூற்பாவகவல். க.

நேரினமணியையோர்ந்துநிரல்படவைத்திட்டாங்கே
ஓரினப்பொருளையாய்ந்திட்டொருவழிவைப்பதோத்தாம்
ஆருமோர்நெறியேயன்றியருத்தங்கள்விராய்ச்சிறந்த
பாரியபொதுச்சொற்றேனேபடர்வதுபடலமென்ப. (உ

சருக்கத்தின்முடிவின்மற்றுஞ்சாரிலம்பகத்தினீற்றில்
விருத்தமாநடையேயாகும்வேற்றிசைப்பாவினுமம்
விரித்துரையதனிேைடுமெய்யுரையுரைப்பொருட்பேர்
பெருத்திடும்பொழிப்பெனுஞ்சொற்பிண்டமாக்கொண்டுகூறும்.

பலத்தினைத்தருவதாயபதிகம்பல்வகைப்பொருட்கள்
துலக்கமேயாகிக்காணத்தொகுதிசெய்திடுவதாகும்
இலக்கியமெடுத்துக்காட்டலிதிகாசமுதாரணப்பேர்
அலக்கண்டீர்ஞாபகந்தானரும்பொருள்பிசியுமாமே. (உ

காட்டியயாப்புத்தூக்குக்கவிசெய்யுள்கவிதைபாவே
பாட்டெனப்படும்வெண்பாவிற்படும்பெயர்வெள்ளைமுற்பாச்
சூட்டியவகவற்பேராசிரியமேதொகைகலிப்பா
மூட்டியபேர்முரற்கைமுடுகியலராகமாமே. (உ

குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுளேகுளகமென்ப
இற்றெனவிருபத்தாறேயெழுத்துநான்கடியுமாகி
உற்றதுசந்தப்பாட்டாமதின்மிகலுவந்தநாமம்
சற்றெனுமருங்குநல்லாய்தாண்டகமென்பதாமே. (ஙூ

கற்றறியெழுத்துமெண்ணுங்கணக்கெனச்சொல்லுநாமம்
சொற்றிடுங்கரணமோடுசூழ்ந்திடுங்கணிதமெண்ணும்
மற்றுறுபெயரெழுத்துவடிவுதன்மையிலெழுத்தாம்
ஒற்றின்பேருடலுடம்போடுறுப்புமெய்புள்ளியாமே. (ஙூ

வரியிராகம்பண்கேயமன்விளிகொளையினேடு
பரவுகாந்தருவங்கீதம்பாணிகாமரமிசைப்பாட்
டிரவியபாலையாழேயுலவியகுறிஞ்சியாழே
மருதஞ்செவ்வழியாழென்னவகுத்தநாலிசையுநாற்பண். (ஙூஉ

நிறைந்திடுமராகத்தோடுநேர்திறமுறுப்புமற்றைக்
குறுங்கலியாசானேந்துங்குறித்தபாலைத்திறங்கள்
பறைந்தநைவளங்காந்தாரம்படுமலைமருளயிர்ப்புச்
செறிந்தபஞ்சுரமெய்யாற்றுச்செந்திறங்குறிஞ்சியென்ப. (ஙூஙூ

;தென்பது—ஒருசாதியாயுள்ள மணிகளை வரிசையாகவைத்தாற்
போல ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படவைப்பது.
-லமென்பது-ஒருவழிப்படாமற் கலந்தபொருள்களோடுபொரு
ந்திப் பலபொருள்களைத்தரும் பொதுச்சொற்கள் தொடர்வது.

பற்றிசைப்பாவென்பது—சருக்கமுடிவினு மிலம்பகத்தீற்றினும்
வேருன நடையது.
ரைப்பொருளின்பெயர்—விரித்துரை, மெய்யுரை. உ.
பாழிப்பென்பது—பிண்டமாகக்கொண்டு கூறுவது.

திகமென்பது—பலவகைப் பொருட்கள் விளக்கமாகிக் காணத்
தொகுதிசெய்வது.
தாரணத்தின்பெயர்-இலக்கியம்,எடுத்துக்காட்டல்,இதிகாசம். ஙு.
ரும்பொருளின்பெயர்—ஞாபகம், பிசி. உ.

ாட்டின்பெயர்—யாப்பு, தூக்கு, கவி, செய்யுள், கவிதை, பா.சு.
வண்பாவின்பெயர்—வெள்ளை, முற்பா. உ.
கவலின்பெயர்—ஆசிரியம், தொகை. உ.
லிப்பாவின்பெயர்-முரற்கை.க.அராகத்தின்பெயர்-முடுகியல். க.

ளகமென்பது—குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுள்.
ந்தப்பாட்டென்பது-இருபத்தாறெழுத்துநான்கடியாகிவருவது.
ாண்டகமென்பது—இருபத்தாறெழுத்தின்மிக்குவருவது.

ணக்கின்பெயர்—எழுத்து, எண். உ.
ண்ணின்பெயர்—கரணம், கணிதம். உ.
ழுத்தாவன—பெயரெழுத்து, வடிவெழுத்து, தன்மையெழுத்து.
ற்றின்பெயர்—உடல், உடம்பு, உறுப்பு, மெய், புள்ளி. ரு.

ிசைப்பாட்டின்பெயர்—வரி, இராகம், பண், கேயம், விளி,
கொளை, காந்தருவம், கீதம், பாணி, காமரம். க0.
ாற்பண்ணின்பெயர்—பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், செவ்
வழியாழ். ச.

ாலையாழ்த்திறங்களின்பெயர்—அராகம், நேர்திறம், உறுப்பு, குறு
ங்கலி, ஆசான். ரு.
குறிஞ்சியாழ்த்திறத்தின்பெயர்—நைவளம், காந்தாரம், படுமலை,
மருள், அயிர்ப்பு, பஞ்சுரம், மெய், ஆற்றுச்செந்திறம். அ.

பெருநவிர்படுகுறிஞ்சிபியந்தையென்றிந்நான்கும்
மருதயாழ்த்திறனேயாகும்வகுக்குநேர்திறத்தினோடு
தருபெயர்திறமேயாமைசாதாரிநான்குமுல்லை
விரவியதிறனில்யாழும்விளரியுநெய்தலாமே. (ந

தளர்வறுபேரியாழேசகோடயாழ்மகரயாழே
வளையுஞ்செங்கோட்டியாழேமற்றைநால்வகையாழ்ப்பேராம்
களையறுகுரலேதுத்தங்கைக்கிளையுழையினோடே
இளியொடுவிளரிதாரமென்பவேழிசையினாமம். (ந

குரன்மிடறுகுந்துத்தங்கூறுநாக்கிளையேயண்ணம்
சிரமுழையிளியேநெற்றிசேர்ந்திடும்விளரிநெஞ்சாம்
தரமுளதாரநாசிதனித்தனிப்பிறக்குமென்னப்
பொருவிலாவாதிமூர்த்திபுலவருக்குரைத்தவாறே. (ந

நான்கொடுநான்குமூன்றுநலம்பெறுமிரண்டினோடு
நான்குமூன்றிரண்டினோடுநல்லமாத்திரைகளாகும்
ஆங்குள ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔவென்னுமேழும்
தீங்கிலாவக்கரங்கள்செப்புமேழிசைக்குந்தானே. (ந

கால்கிளர்மௌவன்முல்லைகடம்பொடுவஞ்சிநெய்தல்
மேலுளவீரைபுன்னைவிரும்பியமணங்களேழாம்
பாலொடுதேன்கடாமேபகர்தயிர்நெய்யினோடே
ஏலமேவாழையேதாடிமக்கனியேழ்சுவைக்காம். (ந

வண்டொடுகிள்ளைவாசிமதயானைதவளைதேனு
ஒண்டிறலாடென்றேழுமோதுமேழிசையிலோசை
திண்டிறல்விசுவாமித்திரன்யமனங்கிதிங்கள்வெய்யோன்
கண்டசொற்கௌதமன்சீர்க்காசிபனீசராமே. (ந

கருதுமந்தரத்தினோடுகாகுளிமந்தவோசை
மருவியமந்தத்தோடுமத்திமஞ்சமனிசைப்பேர்
உரனுறுதாரநீண்டவுச்சமேவல்லிசைப்பேர்
குரலினுக்குரித்தாய்நின்றகூறுமாசான்றிறங்கள். (ச

துறையிரண்டென்பவெள்ளைதோற்றுஞ்செந்துறைகளாகும்
நிறைநரம்பதுவேகூடனிகழும்பண்ணாகுமென்ப
குறைநரம்பதுதிறங்களென்பதுகூறும்யாழின்
உறையுமின்னிசையெழாலேயோதியநூலின்பண்பாம். (ச

நதயாழ்த்திறத்தின்பெயர்—நவிர், படு, குறிஞ்சி, பியந்தை. ச.
ல்லையாழ்த்திறத்தின்பெயர்—நேர்திறம், பெயர்திறம், யாமை, சாதாரி. ச.
ய்தல்யாழ்த்திறத்தின்பெயர்—திறனில்யாழ், விளரி. உ.

ல்வகையாழாவன—பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ். *
ிசையாவன—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

ிசைக்குந் தனித்தனி பிறப்பிடங்களாவன—குரல்-மிடறு, துத்தம்-நா, கிளை-அண்ணம், உழை-சிரம், இளி-நெற்றி, விளரி-நெஞ்சு, தாரம்-நாசி.

ிசைக்குமாத்திரைகளாவன—குரல், ச. துத்தம், ச. கிளை, ரு. உழை, உ. இளி, ச. விளரி, ரு. தாரம். உ.
ிசையக்கரங்களாவன—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

ிசைக்குமுறையே மணங்களாவன—மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், வீரை, புன்னை.
ிசைக்குமுறையே சுவைகளாவன—பால், தேன், தயிர், நெய், ஏலம், வாழை, தாடிமக்கனி.

ிசையோசையாவன—வண்டு, கிள்ளை, வாசி, யானை, தவளை, தேனு, ஆடு.
ிசையீசராவார்—விசுவாமித்திரன், இயமன், அங்கி, திங்கள், வெய்யோன், கௌதமன், காசிபன்.

ந்தவோசையின்பெயர்—மந்தரம், காகுளி. உ.
மனிசையின்பெயர்—மந்தம், மத்திமம். உ.
ல்லிசையின்பெயர்—தாரம், உச்சம். உ.
ரலினுக்குரிய படுமலைப்பாலைமுதலியதிறமேழும் † பாலையாழ்த்திறனும்.

றையிரண்டின்பெயர்—வெள்ளை, செந்துறை.
ண்ணென்னும்பெயர்—நிறைநரம்பிற்று.
றமென்னும்பெயர்—குறைநரம்பிற்று.
ாழினெழுமின்னிசையின்பெயர்—எழால்.

---

* பேரியாழிற்கு நரம்பு, உக, சகோடயாழிற்கு, கசு, மகரயாழிற்கு, கஎ, செங்கோட்டியாழிற்கு. எ.

† திறமேழாவன, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, செம்பாலை, விளரிப்பாலை, கோடிப்பாலை, மேற்செம்பாலை,அரும்பாலை என்பன.

இன்னிசைக்குழலினமமேற்றவங்கியமேவாரி
கின்னரம்வீணையின்பேர்கிளத்தியதண்டுமாகும்
மன்னியயாழ்ப்பேர்கோடவதியொடுவிபஞ்சியாகும்
முன்னியகருவியோடுமொழிந்திடுங்கலமுமப்பேர். (சஉ

வரும்பிரமாணந்தன்னில்வலிகட்டுத்திவவென்றேதும்
திரும்பியமுறுக்காணிப்பேர்தேரின்மாடகமென்றுமே
நரம்பின்பேர்குரலேகோலேதுயரியேநாடின்முப்பேர்
புரிந்ததந்திரியுமப்பேர்போதன்முன்புகன்றவாறே. (சா

அரவமேகளனேயோதையாகுலமாரவாரம்
சுருதிகோடணைபுலம்புதொனியியந்துழனியோசை
உரையிசையிடியேநாதமுரைத்தகோசணையேபாடே
இரைசும்மைவகுணிமூவேழிவைகளேயொலியினமம். (சச

தெளிறலேமுரலன்முக்கல்சிரற்றுதல்பயிலல்வேறு
குளிறலேநரலலோடுகுருமித்தனெளிர்தல்சாலப்
பிளிறலேயுளையும்போதப்பிரற்றலுமெடுத்தலோசை
வளியினலைசயுஞ்சிலையிலையொலிமருமராஞ்சம். (சரு

சிரற்றலேதொனித்தலோடுதெழித்தலேகுமிறல்விம்மல்
உரற்றலேயரற்றல்வேறுமுரைத்தலேயுளத்தலேங்கல்
இரைத்தலேயிரட்டல்சாலவிடித்தலேயிமிழ்த்தன்மற்றைக்
குரைத்தலேமுழக்கல்வீசிக்குளிறலேயிசைத்தலோடு. (சகு

சிலம்பலேயியம்பலோடுசிலைத்தலேதுவைத்தல்கூடி
அலம்பலேகறங்கல்சீறியழுங்கலேதழங்கலோடு
சிலும்பலேகலித்தல்போதத்தெவிட்டலேகனைத்தலோடே
உலம்புதல்புலம்பலெண்ணான்கிவையொலித்தலின்பேரென்ப. (

இம்மெனல்கல்லென்றிட்டலிழுமெனல்வல்லென்றிட்டல் [
பொம்மெனலொல்லென்றிட்டல்பொள்ளெனனெரேலென்றிட்ட
கொம்மெனல்விடேலென்றிட்டல்குறிப்பொடுமுகேரென்றிட்ட
அம்மெனல்சரேலென்றிட்டலனுகரணத்தினோசை. (சஅ

படபடென்றொலித்தல்சாலப்பதபதகளகளென்றல்
மொடுமொடென்றிட்டல்வேறுமொகமொககொளகொளென்றல்
திடுதிடென்றிட்டலோடுநெடநெடநெறுநெறென்றல்
கடகடகலகலென்றல்கருதியவுபயவோசை. (சகூ

ர்ணிசைக்குழலின்பெயர்—வங்கியம். க.
ணயின்பெயர்—வாரி, கின்னரம், தண்டு. ங.
ழின்பெயர்—கோடவதி, விபஞ்சி, கருவி, கலம். ச.

ழ்வலிக்கட்டின்பெயர்—திவவு. க.
றுக்காணியின்பெயர்—மாடகம். க.
ம்பின்பெயர்—குரல், கோல், துயரி, தந்திரி. ச.

லியின்பெயர்—அரவம், களன், ஓதை, ஆகுலம், ஆரவாரம், சுருதி, கோடணை, புலம்பு, தொனி, இயம், துழனி, ஓசை, உரை, இசை, இடி, நாதம், கோசணை, பாடு, இரை, சும்மை, வகுணி. உக.

த்தலோசையின்பெயர்—தெளிறல், முரலல், முக்கல், சிரற்றுதல், பயிலல், குளிறல், நரலல், குருமித்தல், செளிர்தல், பிளிறல், உளை, பிரற்றல். கஉ.

சையுஞ்சிலையானும் இலையானுமெழுமொலியின்பெயர்—மருமராஞ்சம். க.

லித்தலின்பெயர்—சிரற்றல், தொனித்தல், தெழித்தல் குமிறல், விம்மல், உரற்றல், அரற்றல், உரைத்தல், உளைத்தல், ஏங்கல், இரைத்தல், இரட்டல், இடித்தல், இமிழ்த்தல், குரைத்தல், முழக்கல், குளிறல், இசைத்தல். கஅ.

சிலம்பல், இயம்பல், சிலைத்தல், துவைத்தல், அலம்பல், கறங்ல், அழுங்கல், தழங்கல், சிலும்பல், கலித்தல், தெவிட்டல், ணைத்தல், உலம்புதல், புலம்பல். கச. (ஆ ஙஉ.)

னுகரணவோசையின்பெயர்—இம்மெனல், கல்லெனல், இழுமெனல், வல்லெனல், பொம்மெனல், ஒல்லெனல், பொள்ளெனல், நெரேலெனல், கொம்மெனல், விடேலெனல், முகேரெனல், அம்மெனல், சரேலெனல். கங.

பயவோசையின்பெயர்—படபடெனல், பதபதெனல், களகளெனல், மொடுமொடெனல், மொகமொகெனல், கொளகொளெனல், திடுதிடெனல், நெடநெடெனல், நெறுநெறெனல், கடகடெனல், கலகலெனல். கக.

பூசலேதமரமற்றுப்பொருந்தியகுமுறலார்ப்புக்
கோசணையுலம்பலோடுகோடணைகோலாகாலம்
வீசியகலகம்வேறுமிகவுளறுதறெழித்தல்
பேசுமாகுலமொன்றல்லாப்பேரொலியீராறும்பேர். (ரு

ஒன்றல்லாப்பேரொலியின்பெயர்—பூசல், தமரம், குமுறல், ஆ ப்பு, கோசணை, உலம்பல், கோடணை, கோலாகாலம், கலக உளறுதல், தெழித்தல், ஆகுலம்.

திமிர்தலேயெடுத்துவந்ததிமிலமேகளகளங்கள்
குமுதமேபேரொலிப்பேர்கூப்பிடலலறல்கத்தல்
கமையிலாதழைத்தலாகுங்கதறலுமாந்தெழித்தல்
அமைவரவுரப்பல்சீறியதிர்த்திடலதட்டலின்பேர். (ருச

பேரொலியின்பெயர்—திமிர்தல், திமிலம், களகளம், குமுதம்.
கமையிலாதழைத்தலின்பெயர்—கூப்பிடல், அலறல், கத்தல், க றல்.
அதட்டலின்பெயர்—தெழித்தல், உரப்பல், அதிர்த்திடல்.

இறந்ததுநிகழ்வுமற்றையெதிர்வுமாம்புராணஞ்செய்தோன்
அறந்தருகுணபத்திரன்றாளரணெனச்சரணமானோன்
மறந்தலைப்படாதவீரைமன்னன்மண்டலவன்செய்தான்
சிறந்திடுமொலிபற்றும்பேர்ச்செய்யுளைம்பத்திரண்டே. (ருஉ

ஒலிபற்றியபெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆகூ விருத்தம் - எஙங.



# பொருளகராதி.

பக்கம்.

முற்றிற்று.

உ

கணபதி துணை.

# சூடாமணிநிகண்டு

முதலிரண்டுதொகுதிகளின்

## பதப்பொருள்விளக்கம்.



இது

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்புலவரால்

இயற்றி,

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

இராக்ஷச வரு புரட்டாதி மீ.

# முதலாவது

# தெய்வப்பெயர்த்தொகுதி.

## அருகன்பெயர்.

க. அருகன் - பூசிக்கத்தக்கவன், மதிக்கத்தக்கவன். அநகன் - [பா]வமில்லாதவன், துக்கமில்லாதவன், கலக்கமில்லாதவன். (அந்-[இ]ன்மை. அகம் - பாவம், துக்கம், கலக்கம்.) * எண்குணன் - எட்[டு]க்குணங்களுடையவன். நிச்சிந்தன் - சிந்தித்தற்கரியவன். அறவா[ழி]வேந்தன் - அறச்சக்கரத்தலைவன். வாமன் - வணங்கப்படத்தக்க[வ]ன். சினன் - வினைகளைவென்றவன், பூசிக்கத்தக்கவன். வரன் - [சி]றந்தவன், தலைவன். உறுவன் - யாவரினுமிக்கவன். சாந்தன் - [பொ]றுமையுடையவன், மகிழ்ச்சியுடையவன். சினேந்திரன் - † [எ]ண்வகைக் கன்மங்களையும் வென்றவன். முனைவன் - முதல்வன். [மகா]சேனன் - பெரியசேனையுடையவன். தேவன் - பிரகாசமுடைய[வ]ன், மகிழ்ச்சியுடையவன். மூவுலகுணர்ந்தமூர்த்தி - மூன்றுலகங்[க]ளாலு மறியப்பட்ட கடவுள். புனிதன் - சுத்தமுடையவன், புதி[ய]வன். வென்றோன் - வினைகளை வென்றவன். விராகன் - இச்சை[யி]ல்லாதவன். பூமிசைநடந்தோன் - தாமரைப்பூவை வாகனமாகக் [கொ]காண்டுசென்றவன். போதன் - அறிவுடையவன்.

உ. பண்ணவன் - தகுதியுடையவன். கமலவூர்தி - தாமரைப் [பூ]வாகிய வாகனமுடையவன். பரமேட்டி - மேலானவிடத்தில் [இ]ருப்பவன். காதிவென்றோன் - ‡ உபாதிகளைவென்றவன். புண்[ண]ியன் - நற்செயலுடையவ்ன். புலவன் - எல்லார்க்குமறிவாயுள்[ள]வன். புத்தன் - அறிவுடையவன். பூரணன் - நிறைவுடையோன். [பொ]ன்னெயிற்கோன் - (உதயதரம் பிரீதிதரம் கல்யாணதரம் என்[னு]ம்) பொன்மதில்களுக்குத் தலைவன். விண்ணவன் - சுவர்க்கவா[சி]. விமலன் - மலமில்லாதவன். வீரன்-முடிவில்லாத வீரியமுடை[ய]வன். விநாயகன் - உயிர்களுக்கு உறுதிபோதிப்பவன். வீதசோ[க]ன் - சோகமில்லாதவன். அண்ணல் - பெருமையுடையவன். மத

---

* எண்குணங்களாவன: முடிவிலாவறிவு, முடிவிலாக்காட்சி, முடிவிலாவீரியம், முடிவிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமி ன்மை, ஆயுவின்மை, அழிவின்மை என்பன.

† எண்வகைக் கன்மங்களாவன: ஞானுவரணீயம், தரிசனுவ ரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் என்பன.

‡ உபாதிகள் ஞானுவரணீயம் முதலியன.

